

அமைதி

## டிபாஸிட் திட்டங்கள்

[illegible]

| [illegible] | [illegible] |
|---|---|
| 25 / 36 / 48 / 60 | 15% [illegible] |

[illegible]

| [illegible] | [illegible] |
|---|---|
| 25 / 36 / 48 / 60 | 15% [illegible] |
| [illegible] | |

[illegible]

| [illegible] | [illegible] | | | |
|---|---|---|---|---|
| | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | | | | |

[illegible]

## நம்பிக்கை

நம்பிக்கை என்னும் பூரணபாதுகாப்பு!
வங்கிகளில் 'வைப்பு' என்னும் உற்சாகமற்ற முதலீடு, அல்லது 'பங்கு மார்க்கெட்' என்னும் 'மதில் மேல் பூனை' முதலீடுகளுக்கு எதிராக 'பச்சைக் கொடி' காட்டுங்கள் உறுதியாக பலன் தரும் வழியொன்றிற்கு!
நம்பிக்கை என்பதே உபாஸனா! ஒவ்வொரு நாளும், உங்கள் செல்வம் வளர தீவிரமாக உழைக்கும் நிதிநிறுவனம்!
'டிவிஎஸ்'ஸின் சீரியநெறிமுறைகளை, 'உபாஸனா' முன்னிலும் தீவிரமாக தழுவியுள்ளது. திரு. சுரேஷ் கிருஷ்ணா . . . சுந்தரம் பாஸ்னர்ஸ் லிமிடெட் நிறுவனத்தின் தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர். இன்னும் பல 'டிவிஎஸ்' நிறுவனங்களின் இயக்குநர்கள் குழுவில் அங்கம் வகிப்பவர். இவரே 'உபாஸனா' வின் தலைவரும் கூட..
எங்களின் திட்டங்களை கவனமாக பாருங்கள்! பின் கண்களை மூடிக்கொண்டு 'உபாஸனா' வின் படிவத்தை பூர்த்தி செய்யுங்கள்! அதுவும் இன்றே!

**உபாஸனா ஃபைனான்ஸ் லிமிடெட்**
610, மவுண்ட் ரோடு, சென்னை 600 006
போன்: 860437

**தொடரும் நம்பிக்கையென்னும் 'டிவிஎஸ்'பாரம்பரியம்!**

Stimulus/UFL/164/92

# ஃபுட்பால் ஆடப்படும் அரசின் விதிமுறைகள்!

வரும் ஜனவரியில் நடைபெறவிருக்கும் ஜவாஹர்லால் நேரு உலகக் கோப்பைக்கான கால்பந்துப் போட்டிக்காக சர்வதேசத் தரத்திற்கு நேரு ஸ்டேடியத்தைப் புனரமைக்கும் பணி துரிதமாக நடந்து கொண்டிருக்கிறது. பார்வையாளர்களுக்கு இரண்டடுக்கு காலரி உருவாகி வருகிறது. தரையிலிருந்து காலரியின் கூரையின் உயரம் 90 அடி. 40,000 மக்கள் அமர்ந்து ஆட்டத்தைக் காணலாம். ஆட்டம் முடிந்தவுடன் ஆயிரக்கணக்கான மக்கள் சில நிமிஷங்களில் கலைந்து செல்லும் அளவுக்கு வழிகள் அமைக்கப்படுகின்றன. கால்பந்து மைதானம் முழுவதும் புல்லினால் (grass) உருவாக்கப்படுகிறது. கால்பந்து மைதானத்தைச் சுற்றி செயற்கை (ஸிந்தெடிக்) தட ஓட்டக் களம் உருவாக்கப்படுகிறது. விளையாட்டு வீரர்கள் நேரடியாக மைதானத்திற்கு வர வெளியிலிருந்து சுரங்கப் பாதை உண்டு. ஜிம்னாஸியம், மாநாட்டு அரங்கம், உணவகம், டிஸ்பென்ஸரி எல்லாம் உண்டு. ஐந்து ஏக்கர் பரப்பளவில் ஸ்டேடியம் அமைந்திருக்கிறது.



இரவிலும் போட்டிகள் நடக்க, மின் வசதிகள், டெலிவிஷனுக்காக விசேஷ லைட்டிங் வசதி என்று பல வசதிகள் உண்டு.

காலரியின் கீழ் ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ் வருகிறது. வி.ஐ.பிக்கள் அமரும் இடம் ஏ.ஸி. செய்யப் படுகிறது. ஸ்டேடியம் விரைவாக முடிவதற்கு காலரிகள், கூரைகள்

எல்லாம், கான்க்ரீட்டில் முன்கூட்டியே செய்யப்பட்டு (Pre cast) கிரேன்களால் பொறுத்தப்படுகின்றன.

''இந்தியாவிலேயே அதிக எடை தூக்கும் கிரேன் எங்களிடம்தான் இருக்கிறது. இந்த முறையில் கட்டுமானப் பணியை மேற்கொள்ளாவிடில் குறிப்பிட்ட காலத்திற்குள் முடிக்க முடியாது'' என்கிறார் திட்டப் பொறியாளர் லட்சுமணன். சுமார் 5,000 தொழிலாளர்கள் இரவு பகலாக வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். லார்சன் அண்ட் டியூப்ரோ நிறுவனத்தினர் ஈராக்கில் இதுபோன்ற ஸ்டேடியத்தைக் கட்டி முடித்திருக்கிறார்களாம்.

இடையில் ஒருமுறை ஜெ. வந்து பணிகளைப் பார்த்து விட்டுப் போனாராம். ''முதல்வர் எங்கள் வேகத்தைப் பார்த்து திருப்தியடைந்து சென்றார். பொது மக்கள் வந்து செல்வதற்கு ஒன்றிரண்டு வழிகள் கூடுதலாக வைக்கச் சொன்னதைத் தவிர, மற்றபடி ஸ்டேடிய அமைப்பு அவருக்கு பிடித்துப் போனது'' என்று சொல்கிறார் லட்சுமணன்.

எல்லாம் சரி, 35 கோடி ரூபாய்க்கான இந்தத் திட்டப் பணி எப்படித் துவங்கப்பட்டது என்பதுதான் சர்ச்சைக்குரியதாகி விட்டது. அரசு விதிகளின்படி ஒரு கட்டுமானப் பணியை மேற்கொள்வதாக இருந்தால் முதலில் டெண்டர் கோரப்பட வேண்டும். வேலையின் மதிப்புக்கேற்ப, மாநில, தேசிய உலகளாவிய அளவில் டெண்டர்கள் கோரப்பட வேண்டும். யார் குறைவான தொகைக்கு வேலை செய்வதாக ஒப்புக் கொள்கிறார்களோ அவர்களிடமே பணியை ஒப்படைக்க வேண்டும். ஆனால் ஜெ அரசு விதிகளைப் பற்றியெல்லாம் பெரிதாகக் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. அதற்கு சமீபத்திய உதாரணம் நேரு ஸ்டேடியம் புனரமைப்புப் பணி.

முப்பத்தைந்து கோடி ரூபாய்க்கான இந்தப் பணிக்கு எந்தவிதமான டெண்டரும் கோரப்படாமல், வேலை பிரபல நிறுவனமான லார்சன் அண்ட் டியூப்ரோவிடம் நேரடியாகவே ஒப்படைக்கப்பட்டு விட்டது. இப்படிச் செய்யப்பட்டதில் லஞ்சப் பணம் கைமாறியுள்ளதாக கவர்னரிடம் கொடுத்த புகார் மனுவில் தி.மு.க. குறிப்பிட்டுள்ளது.

இந்தப் பிரச்னையை முதலில் சட்டமன்றத்தில் எழுப்பியவர் தி.மு.க. உறுப்பினர் பரிதி இளம்வழுதி. ஆனால் வழக்கப்படி, ஆளும் கட்சியினரும், சபாநாயகரும் சேர்ந்து கொண்டு, அவர் தொடர்ந்து பேசுவதைத் தடைசெய்தனர். ''டெண்டர் ஏன் கோரப்படவில்லை?'' என்று கேட்டதற்கு வேலை மிக அவசரம்; அதனால்தான் டெண்டர் கோரப்படவில்லையென்றும், லார்சன் அண்ட் டியூப்ரோ தரமான நிறுவனம் என்றும் குறிப்பிட்ட காலத்திற்குள் பணியை முடித்து விடக் கூடிய சகல வசதிகளும் அவர்களுக்கு இருக்கிறது என்றும் முதல்வர் பதிலளித்தார். ஆனால் ''இந்தப் பதில் திருப்தியளிக்கக்கூடிய ஒன்றல்ல!'' என்கிறார் பரிதி இளம்வழுதி.

ஸ்டேடியம் பணிக்கு நிதி ஒதுக்கீடு செய்வதிலும் பிரச்னை. மத்திய அரசு உதவிக்கு வரும் என்று எதிர்பார்த்து ஆரம்பிக்கப்பட்டது பணி. ஆனால் மத்திய அரசு கையை விரித்து விட்டது. பிறகு மாநில அரசு என்ன செய்தது? பரிதி இளம்வழுதி தொடர்ந்து சொல்கிறார் :

''எப்போதுமே அரசிடம் எதிர்பாராத செலவுகளுக்கென்று தனி நிதி ஒன்று இருக்கும். திடீரென்று புயல், வெள்ளம், பூகம்பம் என்று வந்து விட்டால் நிவாரணப் பணிகளுக்கு உடனடியாகச் செலவழிப்பதற்காகவே இந்த நிதி. ஆனால் ஜெ. அரசு நேரு ஸ்டேடியத்தைப் புனரமைப்பதற்கு இந்த நிதியிலிருந்து பணத்தை எடுத்துள்ளது. இது சரியல்ல; முறையல்ல. விதிப்படி பொதுப் பணித் துறையின் மூலம் ஒரு செலவுத் திட்டத்தைத் தயாரித்து, சட்டமன்றத்தின் அனுமதி பெற்றே பணத்தை ஒதுக்க வேண்டும். அப்படிச் செய்யவில்லை. சரி, நேரு ஸ்டேடியம்தான் அவசரம் அதனால் விதிமுறைகள் புறக்கணிக்கப்படுகின்றன என்றால், திரைப்பட நகரம் கட்டுவதற்கும், சிறைச் சாலைகளை நவீன முறையில் கட்டுவதற்கும் கூட இந்த அவசரச் செலவுகளுக்கான நிதியிலிருந்தே பணத்தை எடுத்திருக்கிறார்களே அவைகளுக்கென்ன அவசரம்?'' என்று சூடாகக் கேட்கிறார் இளம்வழுதி.

– ப்ரியன்
படம் : ராஜன்



**கா**வி வேட்டி, ஜிப்பா, தலைப்பாகையுடன், அதிர்ந்து பேசாத குரலில், தமது பணிகளை அமைதியாகச் செய்து வரும் சுவாமி அக்னிவேஷின் 'தர்ம பிரதிஷ்டான்' அலுவலகம், புது தில்லி ஜந்தர் மந்தரில் இருக்கிறது.

புறாவுக்கு விலங்கு மாட்டி இருக்க, ஜன்னல் வழியே தெரியும் வானத்தைப் பார்க்கிறது புறா : அம்னெஸ்டி இன்டர்நேஷனலின் போஸ்டர்.

# அமைதிப் புயல் அக்னிவேஷ்!

ஏராளமான புத்தகங்கள். குறிப்பாகக் கல்வியாளர் ரஜனிகோத்தாரியின் நூல்கள்.

குடியை எதிர்த்துப் பிரசாரம் செய்து, ஹரியானா கிராமப்புற இளைஞர்களைத் தம் பால் ஈர்த்தவர் சுவாமி அக்னிவேஷ். கல்லுடைக்கும் குவாரிகளில் கொத்தடிமைகளாக, வருடக் கணக்கில் இருந்து வந்த ஆயிரக் கணக்கான தொழிலாளர்களை மீட்டவர். குழந்தைத் தொழிலாளர்களைத் தேடிப் பிடித்து விடுவிப்பதில் இவருக்கு அசாத்திய ஆர்வம். மிர்ஸாபூரில் கம்பளங்கள் நெய்வதில் ஈடுபடுத்தப்பட்டிருந்த சிறுவர்களை மீட்டு வந்ததில் இவருக்குப் பெரிய பங்கு உண்டு.

''85 சதவிகித ஊழியர்கள் 14 வயதுக்குக் கீழே உள்ள சிறுவர்களே!'' என்கிறார் அக்னிவேஷ்.

பெண்களுக்கு எதிரான கொடுமைகளைக் கண்டித்து மிகப் பெரிய பாத யாத்திரை நடத்தியவர் சுவாமி அக்னிவேஷ். 'சதி' கொடுமையை எதிர்த்து நடத்திய போராட்டம் காரணமாக 87 - ல் ஒரு கமிஷன் நியமிக்கப்பட இவரும் ஒரு காரணம்.

அக்டோபர் 91 - ல், முதல் முதலாக கொத்தடிமை ஒழிப்புக்காக வழங்கப்பட்ட அகில உலக விருதை வென்றவர் அக்னிவேஷ்.

**க**ல்கத்தா பல்கலைக் கழக எம்.காம்., எல்.எல்.பி. பட்டதாரியான சுவாமி அக்னிவேஷ் புனித சேவியர் கல்லூரியில் சட்டமும், பிஸினஸ் மானேஜ்மெண்ட்டும் போதித்தவர். பிறந்தது மத்திய பிரதேசத்தில். 77 முதல் 5 வருடங்களுக்கு ஹரியானா சட்டசபை உறுப்பினர்; கல்வி அமைச்சர். 'பந்துவா முக்தி மோர்ச்சா' என்ற கொத்தடிமை விடுதலை இயக்கத் தலைவர்.

பத்திரிகையாளர்களிடம் இதமாகப் பேசுகிறார் சுவாமி அக்னிவேஷ். கண்டனம் தெரிவிப்பதைக் கூட இவர் கடுமையாகச் செய்யாமல், கண்ணியமாகச் செய்கிறார். சாலைகளில் ஆகட்டும், போகும் இடங்களில் ஆகட்டும், வணக்கத்துடன் இவர் வரவேற்கப்படுகிறார்.

''விடுவிக்கப்பட்ட கொத்தடிமைகளுக்கு வாழ்க்கையை எப்படி அமைத்துக் கொடுக்கிறீர்கள்?''

''76 - ல் கொத்தடிமை ஒழிப்புச் சட்டம் கொண்டு வரப்பட்டாலும், ஐம்பது லட்சம் கொத்தடிமைகள், விலங்குகளைவிடக் கேவலமாக வாழ்க்கை நடத்தி வருகிறார்கள் - விவசாயத் துறை, செங்கல் சூளை, கல் உடைக்கும் குவாரிகள், கட்டுமானப் பணிகள் எல்லாவற்றிலுமாகச் சேர்த்து.... இதில், நான் அமைத்திருக்கும் முக்தி ஆசிரமத்தில் தச்சுத் தொழில், கருமான் பணி, நெசவு, தையல், ஆகியவற்றில் பயிற்சி பெறும் இளைஞர்கள் இருக்கிறார்கள்.''

**கா**லை 5 மணிக்கே முக்தி ஆசிரமம் உயிர் பெற்று விடுகிறது. இரவு பத்து மணிக்குக் கலாசார நிகழ்ச்சிகள் முடிந்த பிறகே ஓய்கிறது. தில்லியின் ஒதுக்குப்புறத்தில் இப்ரஹிம்பூர் கிராமத்தில் அமைதியாக ஒரு புரட்சியைச் செய்து வருகிறது அக்னிவேஷ் ஆசிரமம்.

திருத்தமான ஆங்கிலத்தில் மிக அழகாகப் பேசும் ஆற்றலுள்ள சுவாமிஜிக்கு ரொம்பவும் பிடிக்காத விஷயம் ஆங்கிலம் தான்!

''ஆங்கில மொழி மீது எனக்குத் துவேஷமில்லை; ஆனால் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தைத் தூக்கி எறிந்த நம்மால் ஆங்கில மோகத்திலிருந்து இன்னும் விடுபட முடியவில்லையே, அதுதான் கோபம்'' என்கிறார்.

**- எஸ்.வி.என்**



தமிழ்நாட்டு அரசியல் பாணியில் பங்காரப்பா நடத்திக் காட்டிய ஊர்வலம் அவர் எதிரிகளைக் கலகலத்துப் போகச் செய்திருக்கிறது. ''இது அதிகார துஷ்பிரயோகம்; அரசாங்க யந்திரங்களைப் பயன்படுத்தி இந்த ஊர்வலம் கூட்டப்பட்டது. ஊர்வலத்தில் கலந்து கொண்ட ஒவ்வொருவருக்கும் தலைக்கு ஐம்பது ரூபாய்... சாராய பாக்கெட்டுகள்... பிரியாணி பொட்டலங்கள் என்று விநியோகிக்கப்பட்டன. இருபது கோடிக்கு மேல் மக்களின் வரிப் பணம் இதற்காகச் செலவழிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஊர்வலம் நடத்தியதற்காகவே பங்காரப்பாவைப் பதவி நீக்கம் செய்ய வேண்டும்'' - என்று எதிர்ப்பாளர்கள் கூறிக் கொண்டிருந்தாலும் அந்தக் குரல்கள் சுரத்தின்றி ஹீனமாய் ஒலிக்கின்றன. காரணம், இதுபோன்ற ஆடம்பரமான பெரிய ஊர்வலத்தைக் கர்நாடகம் இதுவரை பார்த்ததில்லை என்பதுதான்!

பொதுவாக எந்த ஒரு அரசியல் கட்சியோ அல்லது தலைவர்களோ தாங்கள் ஆட்சிக்கு வந்த இரண்டாம் ஆண்டைப் பெரிதாகச் சிறப்பித்து விழாவெல்லாம் எடுப்பது மரபில்லை. முதலாவது ஆண்டையும் ஐந்தாவது ஆண்டையும் தான் கொண்டாடுவார்கள். பங்காரப்பாவுக்கு ஏற்பட்ட அரசியல் நெருக்கடியும் நிர்ப்பந்தமும் சரமாரியாகக் கூறப்படும் ஊழல் குற்றச்சாட்டுக்களும் இரண்டாவது ஆண்டைக் கொண்டாடும் கட்டாயத்தை ஏற்படுத்தின.

ஊர்வலம், பொதுக் கூட்டம் என்பது ஓரளவு கர்நாடக அரசியலுக்கு அறிமுகமான நிகழ்ச்சிகள்தாம்.



● பங்காரப்பா : மசாலாவுக்காகக் காத்திருக்க முடியாது...

# பங்காரப்பா: மர்ம முடிச்சுக்கள்



* மேடையிலிருந்தபடி ஊர்வலம் காணும் பங்காரப்பா: கிட்டத்தட்ட டான்ஸ் ஆடும் நிலைக்கு....

ஆனால் வானுயர கட்அவுட்டுகள், ஆயிரக் கணக்கான பேனர்கள், லட்சக்கணக்கான போஸ்டர்கள், ஊர்வலத்தில் கொண்டு வரப்படும் அலங்கார வண்டிகள்... தவிர ஊர்வலத்தைக் குறிப்பிட்ட இடத்தில் நின்று கொண்டு தலைவர்கள் பார்த்துக் கையசைத்தல்... என்பதெல்லாம் இந்த ஊருக்கு ரொம்பவும் புதுசு. இதையெல்லாம் தாம் தூமென்று நடத்தி பெங்களூரையும் மற்றவர்களையும் ஒருவழி செய்து விடுவது என்று தீர்மானித்த பங்காரப்பா, இந்தப் பொறுப்புக்களை ஒப்படைக்கத் தேர்ந்தெடுத்தது அமைச்சர் கே. ஜே. ஜார்ஜையும் முன்னாள் அமைச்சர் ரமேஷையும். இந்த இருவருக்கும் உள்ள ஒற்றுமை என்னவெனில் இருவருமே தமிழர்கள் அதிகமாய் வசிக்கும் பகுதிகளான பாரதி நகர், உத்தரள்ளி ஆகிய பகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். இவர்களைச் சுற்றியுள்ள கூட்டமும் பெரும்பாலும் தமிழர்கள். ரமேஷ் தற்சமயம் விஜயகாந்த்தை வைத்து 'ஏழை ஜாதி' படத்தைத் தயாரித்து வருபவர். ஆகவே தமிழகத்தின் அரசியல் 'கலாசாரத்தை'யும் அமளிதுமளிகளையும் அல்லோலகல்லோலங்களையும் அப்படியே 'இறக்குமதி' செய்வதற்குக் கேட்க வேண்டுமா என்ன...?

கே. ஜே. ஜார்ஜும் ரமேஷும் சேர்ந்து தூள் கிளப்பி விட்டார்கள்! எண்பதாயிரம் பல்புகளைக் கொண்டு அரண்மனைக்கு அலங்காரம்... விதவிதமான போஸ்களில் பங்காரப்பா காட்சியளிக்கும் போஸ்டர்கள் சிவகாசியில் அச்சடிக்கப்பட்டுக் கொண்டு வரப்பட்டன. இந்திரா, ராஜீவ், நரசிம்மராவ், பங்காரப்பா, பங்காரப்பா, மேலும் பங்காரப்பா என ராட்சத சைஸ் கட்அவுட்டுகள் தயாரிக்கப்பட்டன. 4,500 பஸ்கள் தயார்படுத்தப்பட்டன. எல்லா மாவட்



* அஜீஸ் சேட் : பகிரங்கமாகக் குற்றச் சாட்டு....

டங்களிலிருந்தும் கலைக் குழுக்கள் என பத்தொன்பது கலைக் குழுக்கள் அழைக்கப்பட்டன. மொத்த மாநிலத்திற்கும் அரசாங்க விடுமுறை விட வேண்டும் என்பதும் பரிசீலிக்கப்பட்டுக் கடைசியில் ஏனோ அந்தத் திட்டம் கைவிடப்பட்டு விட்டது.

இந்த 'சாதனைத் திருவிழா' பற்றிய அறிவிப்பு வந்ததுமே எல்லாக் கட்சிகளும் கலகலத்துப் போய் விட்டன. இப்படியொரு அமர்க்களம் செய்து விட்டால் ஏழை எளிய மக்கள் மத்தியில் பங்காரப்பாவுக்கு மிக அதிக செல்வாக்கு இருப்பது போல் ஒரு

* ராஜேஷ் பைலட் : சீதாராம் கேசரி : டில்லி புறக்கணிக்கவில்லை






பிரமை ஏற்பட்டு விடுவது தவிர்க்க முடியாமல் போய் விடுமே என்று பயந்தன.

விவசாயிகள் மத்தியில் பெரிய அளவு செல்வாக்குள்ள விவசாயிகள் சங்கத் தலைவரான நஞ்சுண்டசாமி அதே தினத்தை மறியல் தினமாக அறிவித்தார்.

பாரதிய ஜனதா துக்க தினமாகக் கொண்டாடுவோம் என்று அறிவித்தது.

ஜனதா தளமும் எஸ். ஜே. பியும் தர்ணா செய்வோம் என்று அறிவித்தன.

காங்கிரஸ் எதிர்ப்பாளர்கள், பேரணியை நடக்க விட மாட்டோம் என்றனர்.

பங்காரப்பா எதையுமே கண்டுகொள்ளவில்லை. ''சாதனைத் திருவிழா பிரம்மாண்டமாய் நடக்கும். எட்டு லட்சம் முதல் ஒன்பது லட்சம் மக்கள் கூடுவார்கள்'' - என்று அறிவித்தார்.

மூன்று மாதங்களாய் வாரத்திற்கு மூன்று முறை டெல்லி போய் வரும் எதிர்ப்பாளர்கள் கோஷ்டி வழக்கம் போல் டெல்லி போனது. ''சாதனைத் திருவிழாவை நடத்த விடக் கூடாது. அதற்கு முன்னமேயே பங்காரப்பாவை இறக்க வேண்டும்'' - என்ற கோரிக்கையை வைத்து விட்டு வந்தனர்.

ஆந்திராவில் முதல்வரை மாற்றியாகி விட்டது. அடுத்து இங்கேதான். பார்வையாளர் குழு இங்கே வருகிறார்கள் என்று அறிவிக்கப்பட்டது.

ஒரு பத்திரிகை - 'மூப்பனார் பெங்களூர் வந்து விட்டார்' - என்று கூடச் செய்தி வெளியிட்டது. 'சாதனைத் திருவிழா'விற்கு ஒருநாள் அல்லது இரண்டு நாட்கள் முன்னதாக பங்காரப்பா விலக்கப்படுவார் என்று நம்பகமான செய்தி காற்றுவாக்கில் வர -

மக்கள் மட்டுமல்ல; பங்காரப்பாவும் டென்ஷனாகி விட்டார். ''என் மீது கை வைத்துப் பார்க்கட்டும்; நடப்பதே வேறு. என்னை மாற்றினால் அதற்கான விளைவுகளைச் சந்திக்க டெல்லி தயாராயிருக்க வேண்டும்'' - என்று காரசாரமாகச் சவால் விட்டார். மேலிடக் கட்டளையை மீறி மொய்லியிடமிருந்த கல்வி இலாகாவைப் பறித்தார். பங்காரப்பாவின் இந்தப் போக்குக்கு டெல்லியிலிருந்து நிச்சயம் எதிர் விளைவு இருக்கும் என்றுதான் எதிர்பார்க்கப்பட்டது. ''டெல்லியிலிருந்து யாரும் விழாவில் கலந்து கொள்ள மாட்டார்கள்'' என்று மேலிடத்தில் அறிவித்தார்கள்.

அவ்வளவுதான்... இன்னமும் ஒரு நாளோ இரண்டு நாள்களோ, பங்காரப்பா பதவி காலி என்கிற அபிப்ராயம்தான் மாநிலம் முழுக்கப் பரவியிருந்தது. கர்நாடகத்தைச் சேர்ந்த அத்தனை தலைவர்களும் விழாவைப் புறக்கணிக்கச் சொல்லி அறிக்கைகள் தந்தனர். டெல்லி மந்திரிகளான சங்கரானந்த், மார்கரெட் ஆல்வா ஆகி

# பார்க் டவுன் பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985

223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை-600 003. ☎ : 582676

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5 | 19% | 20% |

## தனயோகம் டிபாசிட் திட்டம் - வட்டி வீதம் 20%

குறைந்த அளவு டிபாசிட் ரூ.20,000/- காலம் 5 ஆண்டுகள். மாத வட்டிக்கான செக்குகள் முன் கூட்டியே கொடுக்கப்படும்

சேவிங்ஸ் கணக்குகள் மீது 9.5% வரை வட்டி

உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்துவீர்

5-ம் ஆண்டு முடிவில் ரூ.6000/-ஐத் திரும்பப் பெறுவீர்

10-ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/- ஐத் திரும்பப் பெறுவீர்

15-ம் ஆண்டு முடிவில் மிகப் பெருந்தொகையாக ரூ.50,000/- பெறுவீர்

## பென்ஷனர் நலத்திட்டம்

முதியோருக்கென்றே அளிக்கப்படும் திட்டம்

சேமிப்பு ரூ.13,000/- வட்டி வீதம் - 19% கால வரம்பு 12 மாதங்கள் மட்டுமே

முன்னதாகவே பெறும் காசோலைகள், விதவைகளும், உடல் ஊனமுற்றோர்களும் மற்றும் கல்வி, சமய அறக்கட்டளைகளும் சேர்ந்து பயன் பெறலாம்.

## ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

| பிரதி மாத டிபாசிட் | ரூ. 25/-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும் மாதங்கள் முடிவில் கிடைக்கும் தொகை | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
| ரூ.25 | 330 | 715 | 1,180 | 1,800 | 2,510 | 3,350 | 4,370 |
| ரூ.100 | 1,320 | 2,860 | 4,720 | 7,200 | 10,050 | 13,400 | 17,500 |

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ

ரூ.7500/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,20,000/- பெறலாம்

ரூ.9000/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,44,000/- பெறலாம்

கடன் வேண்டுமா? எங்களை அணுகுங்கள். நகைக்கடன் சவரனுக்கு ரூ.2400/- வட்டி விகிதம் ரூ.1.85 கடனுக்கு உச்சவரம்பு இல்லை. தருவதில் தாமதமில்லை. R.D கட்ட வேண்டியதில்லை...

(Friday Weekly Holiday.)

*கௌரவ ஆலோசகர்:*
P. பாலசுப்ரமணியம், B.Sc
*முதன்மை அறங்காவலர்,*
கந்த கோட்டம், சென்னை-3

*இயக்குநர் குழுத் தலைவர்*
R. விவேகாநந்தன், B.Com.

*பங்குதாரர்களுக்கு மட்டும்:* Business Hours: Week Days 8.30 a.m. to 12.30 p.m. & 2.00 p.m. to 6.00 p.m. Sunday 8.30 a.m. to 12 noon.

—— சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி ——

SURESH

யோரும் பங்காரப்பா அழைப்பை நிராகரித்தனர்.

இந்தச் சமயத்தில் போக்குவரத்து மந்திரியான அஜீஸ் சேட், 'பேரணிக்கு ஆட்களை அழைத்து வர அரசாங்க பஸ்கள் எதுவும் பயன்படுத்தப்படக் கூடாது. ஒரு பஸ்ஸைக் கூட எடுக்க விட மாட்டேன்' என்று நிர்வாகத்தினருக்குக் கண்டிப்பான உத்தரவு போட்டார். சும்மா இருப்பாரா பங்காரப்பா?

அடுத்த நிமிடமே அஜீஸ்சேட்டிடமிருந்து போக்குவரத்துத் துறை பறிக்கப்பட்டு... பேரணி ஏற்பாடுகளைக் கவனித்து வரும் கே. ஜே. ஜார்ஜிடமே விடப்பட்டது. ஊர்வலத்திற்கு இரண்டு நாட்கள் இருக்கும் போது பெங்களூரில் பயங்கர மழை ஆரம்பித்தது. கிட்டத்தட்ட இருபத்து நான்கு மணி நேரத்துக்கு அவ்வப்போது விட்டு விட்டுத் தொடர்ந்து பெய்தது. 'இயற்கைக்கே பொறுக்கவில்லை. அதுதான் இப்படி மழை. நாளைக்கும் இதே போன்றுதான் இருக்கும். பங்காரப்பாவின் திட்டம் அத்தனையும் பாழாகி விட்டது' என்றுதான் பொது மக்களே பேசிக் கொண்டனர். அதிசயிக்கத்தக்க அளவில் முழுவதுமாய் மழை நின்று நல்ல வெயில் கொளுத்த ஆரம்பித்தது.



''உங்க கடையில் சர்க்கரை எப்போதுமே ஸ்டாக் இருக்குதே, எப்படீங்க?''
''அதான் பக்கத்திலேயே ரேஷன் கடை இருக்கே!''

- ச. பாலசந்தர்

பங்காரப்பாவிற்கும் விவசாயிகள் சங்கத் தலைவர் நஞ்சுண்டசாமிக்கும் இடையில் என்ன நடந்ததோ தெரியவில்லை. தாம் அறிவித்திருந்த போராட்டத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டார் நஞ்சுண்டசாமி. நஞ்சுண்டசாமியின் இந்தத் திடீர் பல்டி எதிர்த்தரப்பினரை மேலும் பலவீனப் படுத்தி விட்டது.

பாரதிய ஜனதா கறுப்புக் கொடிகளும் கறுப்புச் சின்னமும் அணிந்து ஆர்ப்பாட்டம் நடத்த, ஜனதாதளத் தலைவர்கள் மகாத்மா காந்தி சிலையின் கீழ் அடையாள உண்ணா விரதம் இருக்க... மாநகராட்சியைச் சேர்ந்த காங்கிரஸ் கவுன்சிலர்களும் எதிர்ப்பு தர்ணாவில் கலந்து கொண்டனர்.

இந்த நிலையில் வீரேந்திர பாட்டீல் காந்தி சிலையருகே வந்தார். ''சென்ற தேர்தலில் காங்கிரஸ் என்னுடைய தலைமையில்தான் ஆட்சியைப் பிடித்தது. அப்போது என்னென்ன வாக்குறுதிகள் தந்தோமோ அவை எதுவுமே நிறைவேற்றப்படவில்லை. முழுக்க முழுக்க ஒரு ஊழல் அரசாங்கம்தான் இப்போது நடைபெறுகிறது. இந்தப் பாவத்திற்குப் பிராயச்சித்தமாக நான் கண்களை மூடி தியானம் செய்வதற்காக இங்கே வந்திருக்கிறேன்'' - என்று சொல்லித் தனி ஆளாய் சிலையடியில் உட்கார்ந்து விட்டார்.

டெல்லியிலிருந்து யாரும் கலந்து கொள்ள மாட்டார்கள் என்று கருதப்பட்டதற்கு மாறாக டெல்லி அமைச்சர்கள் சீதாராம் கேசரியும், ராஜேஷ் பைலட்டும் வந்திருந்தனர். கர்நாடகத்தைச் சேர்ந்த டெல்லி துணை அமைச்சர்களான தாரா தேவியும் தியாமே கவுடாவும் கலந்து கொள்ள, பேரணி கண்டீரவா ஸ்டேடியத்தில் இருந்து அமர்க்களமாய்த் துவங்கி நடந்தது.

எட்டு லட்சம் ஒன்பது லட்சம் என்றெல்லாம் மிகைப்படுத்திச் சொல்லப்பட்டாலும் குறைந்தபட்சம் இரண்டு லட்சம் பேராவது இருக்கும் என்பது கணிப்பு.

ஊர்வலம் போன போது இவ்வளவு பெரிய கூட்டத்தை... இவ்வளவு ஆடம்பரமான பேரணியைப் பார்த்திராத பங்காரப்பா கையசைக்கும் போது உணர்ச்சிவசப்பட்டு, என்ன செய்வதென்று தெரியாமல், திக்குமுக்காடி கையைத் தட்டிக் கொண்டு ஏறக்குறைய டான்ஸ் ஆடும் நிலைக்கு வந்தது ஒரு ரசமான காட்சி.

பொதுக் கூட்டத்தில் அனல் தெறிக்கப் பேசினார் பங்காரப்பா. தமக்கு எதிராகச் செயல்படுபவர்கள் மீது நடவடிக்கை எடுக்கும் அதிகாரம் தமக்கு வேண்டும் என்றார். 'கோழியை அறுத்து வைத்து விட்டுச் சமைக்காமல் மசாலாவுக்காகக் காத்திருக்க முடியாது' என்று உதாரணம் சொன்னார்.

நரசிம்மராவ் இன்னமும் பங்காரப்பாவின் பக்கம்தான் இருக்கிறார் என்றும் அதனுடைய அறிகுறிதான் கடைசி நேரத்தில் சீதாராம் கேசரியும் ராஜேஷ் பைலட்டும் வந்தது என்பதாகவும் ஒரு கருத்து நிலவுகிறது.

''அதெல்லாம் கிடையாது. எனக்குக் கிடைத்த நம்பகமான தகவல்படி பங்கா

ரப்பா பதவியில் இருக்கப் போவது இன்னமும் சில நாட்கள்தாம். இம்மாத முடிவிற்குள் அவர் நீக்கப்படுவார்'' என்கிறார் அஜீஸ் சேட். தற்சமயம் பங்காரப்பாவுக்கு எதிராக மிகத் தீவிரமாய்க் களத்தில் இறங்கியிருப்பவர் அமைச்சர் அஜீஸ்சேட்தான்.

''மேலிடம் பங்காரப்பாவை நீக்காவிட்டால் என்ன செய்வீர்கள்?''

''எங்கள் பொறுமைக்கும் ஒரு எல்லை உண்டு. இப்போதே அந்த எல்லை கடந்து விட்டது. இம் மாதம் முப்பதாம் தேதிக்குள் மாறுதல் செய்யாவிட்டால் நான் ராஜினாமா செய்வேன். அமைச்சரவையிலிருந்து மட்டுமல்ல; எம்.எல்.ஏ. பதவியையே ராஜினாமா செய்வேன். பின்விளைவுகளைப் பற்றி இப்போது எதுவும் சொல்ல மாட்டேன்'' என்று நமக்குப் பேட்டி கொடுத்த அஜீஸ் சேட் இப்போது ராஜினாமாவும் செய்து விட்டார். தொடர்ந்து சில அமைச்சர்கள் ராஜினாமா செய்து கொண்டும் இருக்கிறார்கள். இன்று வரை (28.10.92) ஆறு பேர் தவிர, துணை சபாநாயகர்.

கர்நாடக முஸ்லிம்கள் மத்தியில் மிகவும் செல்வாக்குப் பெற்ற தலைவர் அஜீஸ் சேட். தேவராஜ் அர்ஸ் காலத்திலிருந்தே காங்கிரஸ் அமைச்சரவைகளில் வலுவான அமைச்சராக இருந்து வருபவர். ''நான் பகிரங்கமாகவே குற்றம்சாட்டுகிறேன். தனி நபர் இமேஜை வளர்த்துக் கொள்ள நடந்த இந்த ஊதாரி விழாவுக்காக அரசு கஜானாவிலிருந்து கோடி கோடியாகப் பணம் எடுக்கப்பட்டிருக்கிறது. இந்த அதிகார துஷ்பிரயோகம் குறித்து ஒரு விசாரணைக் கமிஷன் வைக்கட்டும் - அவ்வளவையும் நிரூபிக்கிறேன். என்னுடைய இந்தக் குற்றச்சாட்டை பங்காரப்பாவால் மறுக்க முடியாது. அல்லது அவர் தனியாக ரூபாய் நோட்டு எதுவும் அச்சடிக்கிறாரா என்பது எனக்குத் தெரிந்தாக வேண்டும்'' என்கிறார் அஜீஸ்சேட்.

பங்காரப்பாவோ வெகு அலட்சியமாக, ''இது அரசாங்கம் நடத்திய விழா. அரசாங்கப் பணம் செலவழித்தது உண்மைதான். இதிலென்ன தவறு இருக்கிறது? அரசின் சாதனைகளை மக்களுக்கு எப்படித் தெரிவிப்பது?'' என்று பதிலுக்குக் கேட்கிறார்.

**ப**ங்காரப்பாவுக்கான எதிர்ப்பு கொஞ்ச நஞ்சமல்ல; மொத்தமுள்ள 162 காங்கிரஸ் எம்.எல்.ஏக்களில் 105 பேர் பேரணியைப் புறக்கணித்து விட்டனர். மொத்தமுள்ள எம்பிக்களில் ஐந்து பேரைத் தவிர யாரும் வரவில்லை. அமைச்சரவை சகாக்களில் எட்டுப் பேர் வரவில்லை... என்ற போதிலும் - மந்திரிசபைக் கூட்டங்களிலும் ஐந்து பேர் ஆறு பேர் வருவதில்லை

## அடுத்த இதழில்...

### கண்கள் :
### ஃபாஷனும் பாதுகாப்பும்

◆ கூலிங் கிளாஸ் அவசியம்தானா?

◆ கண் மையும் மஸ்காராவும் கண்களுக்கு நல்லதா?

◆ கண் நோய்களுக்குத் தாய்ப்பால் நல்ல மருந்தா?

◆ செயற்கை வெளிச்சத்திலேயே வேலை செய்வதால் என்ன பாதிப்பு?

**– இப்படிப் பட்ட பல கேள்விகளுக்குப் பதில் அளிக்கும் கட்டுரை**



என்றபோதிலும் தொடர்ந்து பங்காரப்பா பதவியில் நீடிக்கும் சாதனை பங்காரப்பாவுக்கும் நரசிம்மராவுக்கும் மட்டுமே தெரிந்த ரகசியம் அல்லது மர்மம் என்றுதான் சொல்ல வேண்டும். பங்காரப்பாவின் பேரணி மேஜிக்கில் டெல்லி வசியப்பட்டுப் போயிருக்கிறதே தவிர மக்கள் கவரப்பட்டதாகத் தெரியவில்லை. 'டைம்ஸ் ஆஃப் இந்தியா' நடத்திய ஒரு சர்வேயின்படி பங்காரப்பாவை விரும்புபவர்கள் எட்டு சதவீதம் மட்டுமே என்கிறது ரிப்போர்ட். காங்கிரஸ் கட்சியின் இமேஜும் வெகுவாக - இருபத்து மூன்று சதவீதத்திற்குச் சரிந்திருக்கிறது.

பங்காரப்பா எதைப் பற்றியும் கவலைப்படுபவராகத் தெரியவில்லை. அவர் பாட்டுக்கு தினசரி வெள்ளைச் சட்டையும் ஷார்ட்ஸும் அணிந்து பேட்மிண்டன் விளையாடிக் கொண்டிருக்கிறார். அவருடைய சர்வீஸ்கள் தொடர்ந்து அவருக்கு வெற்றியையே தந்து கொண்டிருக்கின்றன - ஆட்டக் களத்திலும் அரசியல் களத்திலும்...

**– அமுதவன்**

அட்டை வண்ணப்படம் : உத்ரா



பாப்பாரப்பா ஆட்சி...
என்ன ஆனாலும் சரி... நான்தான் பைலட்டு! யாரும் அசைக்க முடியாது!
ராஜினாமா செய்த அமைச்சர்கள், இளை... சபாநாயகர்
தப்பிச்சோம்...
பிழைச்சோம்...!
அமெரிக்க ஜனாதிபதி தேர்தல்
சுதந்திரதேவி சிலை
JULY 4
தரக்குறைவான பிரச்சாரம்
JULY 4
கள்ளச் சாராயம்
பார்
அடேயப்பா, அசத்தலான டான்ஸ்...!
இதை நாமும் கத்துக்கிட்டு நம்ம ஊர்ல போயி ஆட வேண்டியது தான்!
தமிழகத்தின் மதுவிலக்கு செயல்பாடு பற்றி அறிய வந்த ஆந்திர அமைச்சர்கள்



கல்கி

1992
நவம்பர் 8
மலர் : 51
இதழ் : 15
ஆங்கீரச
ஐப்பசி 23



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

# தேவை : செயல்படும் பிரதமர்

**எ**ண்ணித் துணிய வேண்டும்தான்; துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்குத்தான். அதற்காகச் செயலில் இறங்காமல் காலமெல்லாம் யோசித்து யோசித்தே பொழுதைக் கழிப்பதா? பிரதமரிடம் இந்தக் குறைபாட்டைத் தான் காண்கிறோம். நல்ல முடிவு, சரியான முடிவு எடுக்க வேண்டுமே என்பதற்காக யோசித்து, யோசித்து, யோசித்து... ஆறப் போட்டால் சில விஷயங்கள் சரியாகி விடும், உண்மை. எல்லா விஷயங்களும் அல்ல. ஆறப் போடுவது ஆபத்தில் முடிவதும் உண்டு. ராமஜன்மபூமி பிரச்னை அத்தகைய ஒன்று.

ஹிந்துமதத் தீவிரவாதிகளை ஒன்றுதிரட்டி விமானத்தில் ஏற்றி தில்லிக்கு அழைத்து வந்து பேசி அவகாசம் வாங்கிக் கொண்ட அளவில் நரசிம்மராவ் செய்த காரியம், 'ரொம்ப சரி, சாணக்கியம்' என்று நாமும் மகிழ்ந்தோம். ஆனால் அதன்பின்...? அவர் வாங்கிக் கொண்ட அவகாசம் தீர்ந்து போனது ஒன்றுதான் நடந்திருக்கிறது. எந்த முடிவும் எடுக்கப்படாமல், மேலும் கொஞ்சம் அவகாசம் கேட்டு வாங்கிக் கொள்ள முயற்சி செய்வார் என்றுதான் இப்போது தோன்றுகிறது. கல்யாண்சிங் கூட, "இன்னும் கொஞ்சம் அவகாசம் தரலாம்; ஆனால் பிரச்னையைக் காலத்துக்கும் இழுத்தடிக்க அனுமதிக்க முடியாது" என்று கூறியிருக்கிறார்.

பிரதமருக்குக் கவனிக்க வேண்டிய பிரச்னைகள் ஏராளம் உண்டு. ஆனால் ராமஜன்ம பூமி பிரச்னையை விட முக்கியமான, அவசரமான, ஆபத்தான பிரச்னை ஒன்று இருப்பதாக நமக்குத் தோன்றவில்லை. கேட்டு வாங்கிக் கொண்ட அவகாசத்தில் இருதரப்பினரையும் நெருங்கி வரச் செய்யவும் நல்லெண்ணத்தை வளர்க்கவும் எவ்வளவோ செய்திருக்கலாம். பிரச்னை தீராவிட்டாலும் மனப்பூர்வமான முயற்சி இருக்கிறது; ஓரளவு முன்னேற்றம் இருக்கிறது என்ற நம்பிக்கையையாவது உருவாக்கியிருக்கலாம். வாய்ப்பு நழுவ விடப்பட்டது.

பிரதமரின் இந்த மெத்தனம் வேறு பல விஷயங்களிலும் காணப்படுவதைப் பார்க்க, இது மெத்தனமா, கையாலாகாத்தனமா என்ற கவலையும் பயமும் கூட மக்களுக்கு ஏற்படுகிறது.

தார்மீக ரீதியில் பங்காரப்பா ஆட்சி புரியும் தகுதி இழந்து நீண்ட காலமாகி விட்டது. இதை உணர்ந்து சட்டமன்ற காங்கிரஸ் உறுப்பினர்களை அழைத்து, 'மாற்றுத் தலைவரை ரகசிய வாக்கெடுப்பு மூலம் தேர்ந்தெடுங்கள்; ஆனால் இன்று தேர்ந்தெடுக்கப்படுகிறவர்தான் தேர்தல் வரை முதல்வர் என்பதை உறுதியாக மனத்தில் பதிய வைத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்ல என்ன தயக்கம்? அல்லது ஒருவேளை ஒரு முதல்வரை இப்படி நட்டாற்றில் கழற்றி விடுவது தவறு என்று பிரதமர் கருதுவாரேயானால் பங்காரப்பாவிடம், 'நம்பிக்கை வோட்டெடுப்பு நடத்தி உங்களுக்கு உள்ள ஆதரவை நிரூபியுங்கள்' என்று கூற என்ன தடை?

'அரசின் அநாவசியச் செலவினங்களைக் குறைப்போம்' என்று அறிவித்தார் பிரதமர். 'அதற்கு முதற்படியாக தேவையற்ற பல இலாக்காக்களை ஒழித்துக் கட்டி, உபயோகமற்ற பல பதவிகளையும் ரத்து செய்து, சிக்கன நடவடிக்கைகள் மேற்கொள்வேன்' என்றார். பேசியதோடு சரி. தேவையோ, இல்லையோ, பல்வேறு இலாக்காக்களும் 'ஜாம் ஜாம்'மென்று இருந்து கொண்டுதான் இருக்கின்றன. அதில் பதவி வகிப்போர் ஜாலியாக நாற்காலி தேய்த்துச் சம்பளம் வாங்கிக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

தொழில் துறையிலும், பொருளாதாரத்திலும் மகத்தான மாற்றங்கள் செய்ய நரசிம்மராவ் காரணமாயிருந்தார் என்பது உண்மையே. ஆனால் ப. சிதம்பரம் ராஜினாமா செய்து விட்டுப் போன பிறகு, தொழில் துறையின் விலங்குகள் தகர்க்கப்படும் பணி தடைப்பட்டு நிற்கிறது. ஹர்ஷத் மேத்தா விவகாரம் பிரதமரை நிதானப்படுத்தலாம்; ஆனால் பயமுறுத்தி செயலற்றுப் போகச் செய்யக் கூடாது.

'நடப்பது நடக்கட்டும்; நடப்பதெல்லாம் நன்மைக்கே' என்றிராமல், பிரதமர், 'எது எது, எப்படி எப்படி நடக்க வேண்டும்' என்று தீர்மானித்து, அது அது, அப்படி அப்படி நடக்க வழி காண வேண்டும்.

பள்ளி ஆசிரியை ஒருத்தியைத்தான் திருமணம் செய்து கொள்வேன் எனப் பிடிவாதம் பிடிக்கும் படிப்பறிவில்லாத கதாநாயகன் சத்யராஜ்... அது ஏன் என்பது தெரியாமலே அதற்குத் துணைநிற்கும் தோழன் கவுண்டமணி... அவர்களுடைய முயற்சிகள்... தோல்விகள்... அவை தோற்றுவிக்கும் சிரிப்பலைகள்...

சுகன்யாவின் சந்திப்பும் அவர் காதலைப் பெற சத்யராஜ் மேற்கொள்ளும் அடுக்கடுக்கான அணுகுமுறைகளும் நேரெதிர் விளைவு



# தேவர் மகன்

பெரியசாமி தேவரின் (சிவாஜி கணேசன்) அந்த கம்பீரம், கண்களின் ஒரு வீச்சிலேயே தன் எண்ணங்களையும் விருப்பு - வெறுப்பையும் புலப்படுத்தி விடும் பாங்கு, வெளிநாட்டிலிருந்து திரும்பும் மகன் தெலுங்குப் பெண் ஒருத்தியுடன் வந்து சேர, அதைப் பற்றிய தன் அபிப்பிராயத்தைச் சின்னச் சின்னப் பார்வைகளில் வெளிப்படுத்தும் நயம், பேத்திகளுடன் அவர்களுக்குச் சமமாகப் பேசி, விளையாடி, பாடி (பாடியிருப்பவர்கள் : சிவாஜி, கமலின் மகள் ஸ்ருதி) மகிழும் பாசம், பஞ்சாயத்துக் கூட்டத்தில் வயதுக்கும் வழிமுறைகளுக்கும் மதிப்புத் தராமல் தூக்கியெறிந்து பேசும் தம்பி மகனுக்கெதிராகப் பொங்கியெழும் கோபம்... வயதானாலும் சிங்கம் சிங்கம்தான்.

லண்டன் கல்வியும் பணக்காரச் செழுமையும் கொண்டு தரும் நாகரிக நகாசில் கௌதமி ஒரு துருவம் என்றால், கல்வியறிவு இல்லாத கிராமிய ஏழைமை வாழ்க்கை கொண்டு தரும் பாமரத்தனமான பயத்தில் ரேவதி நேரெதிர் துருவம். தேவர் மகனின் திருமணத்துக்குப் பின் இந்த இருவருக்கும் நேரும் சந்திப்பு ஒரு மினி கிளைமாக்ஸ். அதன்பின் ஒரு காவியமான திருப்பத்தைக் கொண்டு வருவது 'இஞ்சி இடுப் பழகா' பாடல்.

நிலத்தைப் பிரிப்பதற்கென்று அமைக்கப்படும் நெடுந்தொலைவு வேலி, உடைப்பெடுத்துக் கொண்டு ஊருக்குள் பாய்ந்து குடிசைகளை நாசப்படுத்தி உயிர்களைக் கணக்கில்லாமல் பலிவாங்கும் பெரு வெள்ளம், வானளாவிய தேர் அமைத்துப் பெருங்கூட்டமாக ஊரே திரண்டு கூடி ஒன்றுசேர்ந்து இழுத்து உற்சவம் கொண்டாடும் வேளையில் மனித குண்டு வெடித்துத் தேர் சிதறிப் பற்றியெரிந்து விளைவிக்கும் நாசம்... ஹாலிவுட் பாணி பிரும்மாண்டத் தன்மைக்குச் சில உதாரணங்கள்.

தேவர் மகன் சக்திவேலன் (கமல்) உறக்கத்தில் இருக்கும் புலி. தந்தை இருக்கும் வரை அடக்கம், பணிவு, பதவிசு. அடக்கி வாசித்தே அதிதீவிர உணர்வுகளையும் வெளிப்படுத்த முடிந்திருப்பதில் அவர் பெற்றிருப்பது பெரு வெற்றி. அதன்பின் -

# திருமதி பழனிச்சாமி

களை உண்டுபண்ணி அரங்கில் நிறைப்பது உச்சகட்டச் சிரிப்பு. இடை யில் புகுந்து அப்ளாஸ் பெறுகிறவர் குஞ்சு கவுண்டர்(ர) இயக்குனர் ஆர். சுந்தரராஜன். அட்டகாசம்!

இரண்டே காட்சிகளில் இடம்பெற்று, அதில் ஒரு பாடலின் சில வரிகளுக்கு வாயசைத்து, சத்யராஜ் - சுகன்யாவின் திருமணத்துக்கு ஒரு இரியா ஊக்கியாகச் செயல்படுகிறவர் 'நட்புக்காக' ரேகா.

சத்யராஜின் திருமண நோக்கத்தின் பின்னணியில் உள்ள உண்மை வெளிப்படும் போது கதையில் பிடிப்பது சூடு. அதில், தீப்பெட்டித் தொழிற்சாலையில் வேலை பார்க்கும் சிறுவர்களும் சிறுமிகளும் படும் அவஸ்தைகள் பளிச். கூடவே, அடிப்படைக் கல்வி அறிவைப் பெற் றிருக்க வேண்டியதன் அவசியத்தைக் கோடிட்டுக் காட்டும் சின்னச் சின்ன நிகழ்ச்சிகள்.

தொழிற்சாலை உரிமையாளரின் கட்டுப்பாடுகளையும் அடியாட் களையும் மீறிச் சிறுவர்களும் பெற்றோர்களும் கொஞ்சம் கொஞ்சமாக சுகன்யாவின் பள்ளியை நாடி வருவதும், எரிக்கப்பட்டு விடும் பள்ளிக் கட்டடத்தைக் கூட்டு முயற்சியாகக் கட்டி முடிப்பதும் மனத்தை நிறைக்கும் காட்சிகள்.

இந்தக் கட்டத்தில் மிகப் பொருத்தமாகப் பயன்படுத்தப்பட்டிருக் கும் பாடல் :

''ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டா
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டா''

திரும்ப முணுமுணுக்க வைக்கும் பாடல் : 'குத்தாலக் குயிலே...'

யதார்த்தத்தை மீறிய நிகழ்ச்சிகள் அங்கங்கே ஊடுருவினாலும் - மையக் கருத்துக்கு ஒரு ஷொட்டு.

சித்தப்பா மகன் (நாசர்) அவரை உசுப்பி விடப் போக, கொண் டிருந்த கட்டுப்பாடான கொள்கையையும் மீறி உச்சகட்டத்தில் என்ன வொரு பயங்கரத்தைச் செய்து விட நேர்ந்து விடுகிறது!

எதிர்பாராத முடிவு.

பளிச்சென்று மனத்தில் பதிகிறவை : பாத்திரப் படைப்பு, ப்ளஸ் அதற்குத் துணைபோகிற வகையில் திரைக்கதை அமைப்பிலும் இயல் பான வசனத்திலும் செலுத்தப்பட்டுள்ள துல்லியமான கவனம்.

- சி. ஆர். கே.



## அட, அப்படியா!

# மனிதனை வெல்லும் எறும்பு!

!! பல பூச்சிகள் தங்கள் உடலில் உள்ள ரோமத்தின் மூலமாகவே ஒலியை உணர்கின்றன. ஆண் கொசுவின் உணர்வுக் குழாய்களில் (antennae) உள்ள ஆயிரக்கணக்கான சிறிய மயிர்க் கால்கள் ஒலியினால் அதிர்வுறும் போது, அந்த நுண்ணிய அதிர்வுகளின் மூலம் பல்வேறு ஒலிகளை கொசுவின் நரம்பு மண்டலம் அறிந்து கொள்கிறது. கரப்பான்பூச்சியும் இதே முறையில் ஒலியை உணர்கிறது. அதன் ஒலிவாங்கி ரோமங்கள் அதன் வயிற்றுப் பகுதியில் உள்ளன. கம்பளிப் பூச்சிக்கோ உடல் முழுதும் ரோமம் உள்ளது - எனவே உடல் முழுக்கக் காதுதான்!




!! உலகின் மிக வறட்சியான இடம் கலாமா (Calama) சிலி தேசத்து (தென் அமெரிக்கா) அடகாமா பாலைவனத்தில் உள்ளது, கலாமா.

!! தென் ஆப்பிரிக்காவின் தேசிய மலர் புரோடி (Protea). இது காட்டுத் தீயில் கூடக் கருகாது!

!! ஓர் எறும்பினால் தன் உடல் எடையைப் போல் ஐம்பது மடங்கு பளுவைத் தூக்க முடியும். மனிதர்களுள் பளு தூக்கும் வீரர்கள் கூட தங்கள் எடையைப் போல் 38 மடங்கு பளுவையே தூக்குகிறார்கள். சராசரி மனிதனுக்கோ, தன் எடைக்குச் சமமான பளுவைத் தூக்குவதே சாத்தியம். (அதுவும் அனேகம் பேரால் முடியாது). பளு தூக்கும் விஷயத்தில் எறும்புடன் மனிதனை ஒப்பிடுகையில் 50:1 என்ற விகிதாசாரத்தில் எறும்பே அமோக வெற்றி பெறுகிறது.

!! உலகிலேயே எடை குறைவான பொருள் சாம்பல்.

!! அனேகமாக எல்லாப் பொருள்களையும் கரைக்கக்கூடிய ஆற்றல் படைத்த ரசாயனத் திரவம் தண்ணீர்தான்! போதுமான அவகாசம் கொடுத்தால், தண்ணீர் பூமிப் பரப்பிலுள்ள அனைத்துப் பொருள்களையுமே கரைத்து விடும்!

!! உலகிலேயே மிக மெதுவாக நகரும் உயிரினம் நத்தை. ஒரு மைல் நகர்வதற்குச் சுமார் மூன்று வாரங்கள் எடுத்துக் கொள்ளும்.

!! 1921 இல் நோபல் பரிசு பெற்றார் விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டீன். இதற்குப் பதினாறு ஆண்டுகளுக்கு முன்னர் அவர் வெளியிட்ட பிரசித்தமான relativity theory க்கு இப்பரிசு கிடைக்கவில்லை; அதிகம் பிரபலமடையாத photo electric effect கொள்கை விளக்கத்துக்கே நோபல் பரிசு வழங்கப்பட்டது.

!! ஆங்கில எழுத்தாளர் லிட்டன் ஸ்ட்ரேசியின் மாமா வில்லியம் ஸ்ட்ரேசி. இவர் இந்தியாவில் ஐந்து ஆண்டுகள் வாழ்ந்த போது, கல்கத்தா கடிகாரங்களே உலகில் மிகத் துல்லியமாய் நேரம் காட்டும் கடிகாரங்கள் என்று தீர்மானித்தார். எனவே, இவர் இங்கிலாந்து திரும்பிய பின்னரும் கல்கத்தா நேரப்படியே வாழ்க்கை நடத்தினார். மற்ற ஆங்கிலேயர்கள் பிற்பகல் தேனீர் அருந்திய நேரத்தில் உறங்கச் சென்று, நள்ளிரவில் விழித்தெழுந்து தமது அன்றாட அலுவல்களைக் கவனித்தார். இவ்வாறு 56 ஆண்டுகள் வாழ்ந்தார்!



தொகுப்பு : உதய்லால்

**தேவி** 70mm A/c
11.30, 2.45, 6.15, 10.00
**உதயம்** A/c
3 காட்சிகள்
**அன்னை அபிராமி** A/c
**சக்தி அபிராமி** A/c
**அகஸ்தியா** 70mm
4 காட்சிகள்
**ஸ்ரீபிருந்தா** A/c
பகல் 11.30 மணி

**கமல்ஹாசன்**
வழங்கும்
ராஜ்கமலின்






சினிமாஸ்கோப்

பரதன் இளையராஜா ஸ்ரீராம் கவிஞர்வாலி **Elegant**

# T. S. S. NIDHI LTD

ESTD 1973

THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Office: 230, R. K. Mutt Road, Mylapore, Madras 600 004. Phone: 77503.

THIRUVANMIYUR BRANCH : 112, Thiruvalluvar Salai, Kamraj Nagar, Madras 600 041.

## DEPOSIT SCHEMES

### FIXED DEPOSIT SCHEME

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| Period (months) | Rate of interest P.A. | CASH INCENTIVE |
|---|---|---|
| 6 | 15 % | not applicable |
| 12 | 17 % | $^{1}/_{2}$ % |
| 24 | 18 % | 1 % |
| **36** | **19 %** | **$1^{1}/_{2}$ %** |
| **60** | **20 %** | **2 %** |

### KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan)

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| DEPOSIT AMOUNT RS. | PERIOD (Months) | MATURITY VALUE RS. | CASH INCENTIVE |
|---|---|---|---|
| 1000 | 12 | 1180 | $^{1}/_{2}$ % |
| 1000 | 24 | 1425 | 1 % |
| 1000 | 36 | 1760 | 1 % |
| **1000** | **45** | **2025** | **$1^{1}/_{2}$ %** |
| **1000** | **67** | **3025** | **2 %** |

### HIGHLIGHTS:

* Recognised as a **NIDHI COMPANY** by Central Government of India.
* **Company is in 20th year of Service.**
* Monthly interest warrants for the financial year would be despatched in advance at the beginning of the year for fixed deposits.
* No tax deduction at source if the fixed deposit holders submits 15 H in case. For any financial year interest exceeds Rs. 2500/-.
* Loan facility upto 75 % on Fixed Deposit and 85 % on Recurring Deposit paid-up amount.
* Pre-mature repayment facility as per terms and conditions
* Your Deposit amount is advanced against Gold Jewels and immovable properties of Madras city limits.
* Transaction with members only.
  (Rupees Two only for Membership.)

### JEWEL LOAN

Jewel loans granted on Gold ornaments at Rs. 255/- per gram i.e. Rs. 2040/- per sovereign (8 gm).

Recurring Deposit not required.

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME 19 % p.a.

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS.)

**Minimum Deposit Rs. 10000/-** **Period - 12 months.**

### RECURRING DEPOSIT SCHEME

(Minimum of Rs. 10/- and in Multiples of Rs. 10/-)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| MONTHLY DEPOSIT | 100 | 100 | 100 | 100 | 100 | 100 |
| PERIOD (Months) | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
| MATURITY VALUE | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

### SAVINGS DEPOSIT SCHEME 9%

| | BUSINESS HOURS | | WEEKLY HOLIDAY |
|---|---|---|---|
| | WEEK DAYS | SUNDAYS | |
| HEAD OFFICE Mylapore | 9 am - 12.30pm<br>2.30 pm - 5 pm | 9 am to 12.30pm<br>- | FRIDAY |
| BRANCH OFFICE Thiruvanmiyur | 9 am - 12.30pm<br>2.30 pm - 5 pm | 9 am to 12.30pm<br>- | TUESDAY |

P. S. SAMBASIVAM
Secretary

**வடக்கு வாசல் :**

# யமுனை தூய்மை அடையுமா?



தில்லியில் மிக அதிகமாகப் புகை வெளியிடப் படும் பகுதிகள், மக்கள் புனித நதி என்று கருதும் யமுனை ஆற்றுப் பகுதியும், ராஜ்காட்டில் மகாத்மா காந்தியின் சமாதி அமைந்துள்ள பகுதியும். காற்றில் மனிதன் தாங்கக்கூடிய புகை ஒரு கன மீட்டருக்கு 150 மில்லி கிராம் கரித்துகள் அடங்கியது; இப்பகுதிகளிலோ தில்லி எலெக்ட்ரிக் சப்ளை கம்பெனியும், இந்திரப் பிரஸ்தா தெர்மல் பிளாண்ட்டும் சேர்ந்து வெளியிடுவது ஒரு கன மீட்டருக்கு 2000 மில்லி கிராமுக்கு மேல்! சுற்றுச்சூழல் பராமரிப்பின் பொறுப்பேற்றிருக்கும் அமைச்சர் கமல்நாத் இரு கம்பெனிகளின் அதிகாரிகளையும் அழைத்து, அவர்கள் வெளியிடும் புகை யளவை 150 மில்லி கிராம் அளவுக்குக் குறைக்க வேண்டும் என்று எச்சரிக்கை விடுத் திருக்கிறார். தில்லி எலெக்ட்ரிக் கம்பெனி 'இதற்கு ஒரு கோடி ரூபாய்க்கு மேல் செல வாகும்; இப்போது பணமில்லை'' என்று மன்றாடிப் பார்த்தது; ஆனால் அமைச்சர் மசியவில்லை. அதே போல், யமுனையில் கலக்கும் கழிவுப் பொருள்களையும் ஒரு மீட்டருக்கு 400 மில்லி கிராம் அளவிலிருந்து 100 மி.கிராம் அளவிற்குக் குறைக்கும்படி கேட்டுக் கொண்டிருக்கிறார். கொடுக்கப்பட்டிருக்கும் காலம் ஆறு மாதம்! யமுனை உண்மையிலேயே தூய்மை அடைகிறதா என்று பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்!

## பறந்தோடும் விமானிகள்!

மாதம் ஐந்து விமானிகள் வீதம் இந்தியன் ஏர்லைன்ஸை விட்டு வெளிநாட்டு விமான சர்வீஸ்களை நோக்கிப் பறந்த வண்ணம் இருக்கின்றனர். இந்தியன் ஏர் லைன்ஸ் இயக்கும் 101 ரூட்களில் 23-இல் மட்டுமே லாபம் காண்கிறது. இதுவரை 26 விமானிகளை இழந்த இ. ஏர்லைன்ஸ் தனது சர்வீஸ்களைக் கணிசமாகக் குறைத்துக் கொண்டிருக்கிறது. சலித்துக் கொள்ளும் விமானிகளில் தில்லியைத் தலைமையகமாகக் கொண்ட விமானிகள்தான் அதிகம். காரணம், சென்னையிலிருந்து சிங்கப்பூருக்கும், பம்பாயிலிருந்து ஷார்ஜாவுக்கும் பறக்கும் விமானிகளுக்குக் கணிசமான அளவு டாலர்களில் தினப்படி கொடுக்கப்படும் போது, தில்லியிலிருந்து காத்மாண்டு செல்லும் விமானிகளுக்கு ரூபாயில் மட்டுமே கொடுக்கப்படுகிறது; இதனால் தில்லிவாழ் விமானி மற்ற இரு நகரங்களில் வாழும் விமானிகளை விட 60% குறைவாக மொத்த ஊதியம் பெறுகிறார் என்பதுதான். ராஜினாமா செய்த விமானிகளில் அனேகர் தில்லிக்காரர்கள்.

## மனித உரிமை

## - முதல்வர்கள் அசட்டை

தேசிய மனித உரிமைகள் கமிஷனின் முதல் கூட்டத்தில் பங்குபெற வேண்டிய ஐந்து மாநில முதல் மந்திரிகளில் நால்வர் வரவேயில்லை. மத்திய அரசு நவம்பரில் துவங்கவிருக்கும் பார்லிமெண்ட் தொடரில் மனித உரிமைச் சட்டம் தாக்கல் செய்யப்படவிருக்கிறது. இதற்கான மசோதாவின் நகலை ஐந்து மத்திய மந்திரிகளும், ஐந்து மாநில முதல்வர்களும் விவாதித்து முடிவு செய்ய வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. அதன் முதல் கூட்டத்திற்கு ராஜஸ்தான் முதல்வர் மட்டுமே வந்திருந்தார். பீகார், மேற்கு வங்கம், மகாராஷ்டிரம், ஆந்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களின் முதல்வர் கள் வரவேயில்லை.

## ஜனத்தொகைக் கடிகாரம்!

தில்லி பஸ் ஸ்டாண்டிலும், ஆல் இந்தியா இன்ஸ்டிட்டியூட் ஆஃப் மெடிகல் சயன்ஸிலும் பொருத்தப்பட்டுள்ள இரு கடிகாரங்கள் மணியைக் குறிக்காமல், பெருகி வரும் ஜனத் தொகையைத்தான் குறிக்கும். இத்தகைய ஒரு கடிகாரத்தைத் திறந்து வைக்கும் விழாவில் தில்லியின் லெஃப்டினண்ட் கவர்னர் பி. கே. தவே திரைச்சீலையை அகற்றிய அந்தச் சில நொடிகளில் ஜனத் தொகையில் ஐந்து எண்ணிக்கைகள் அதிகமானதைக் காட்டியது. இத்தகைய ஒரு கடிகாரம் அடுத்தபடியாக சண்டிகரில் பொருத்தப்பட இருக்கிறது.

**- ராஜீவி நரசிம்மன்**

# 4. விசுவாமித்திரர்

தசரதனுக்கு மூன்று பத்நினிகள் - கௌசல்யை, சுமித்திரை, கைகேயி. வேள்வியில் அடைந்த பாயசத்தை அருந்தியதின் பயனாக மூன்று பத்நினிகளும் கர்ப்பம் தரித்தார்கள். காலக்கிரமத்தில் கௌசல்யா தேவி ராமனைப் பெற்றாள். அடுத்தபடி கைகேயி பரதனைப் பெற்றாள். சுமித்திரா தேவி இரு குமாரர்களைப் பெற்றாள். அவர்களே இரட்டையர்களான லக்ஷ்மணனும், சத்ருக்னனும். பாயசத்தில் அருந்திய பங்கின் விகிதாசாரப்படி இந்த நான்கு குமாரர்களுக்கும் விஷ்ணு அம்சம் சொல்லப்படுகிறது. முறையே ராமன் விஷ்ணுவில் பாதி என்றும், லக்ஷ்மணன் விஷ்ணுவில் கால் பங்கு என்றும், பரதனும் சத்ருக்னனும் ஒவ்வொருவர் அரைக்கால் பங்காகவும் சொல்லப்படுகிறது. சுமித்திரை முதலில் அருந்தியது கால் பாகம், கடைசியாக அருந்தியது கைகேயிக்குத் தந்தது போக மிஞ்சி நின்ற அரைக்கால் பாகம். முந்தி அருந்திய கால் பங்கு பாயசம் லக்ஷ்மண சொரூபமாயிற்று. பிந்திய அரைக்கால் பங்கு சத்ருக்ன சொரூபமாயிற்று. இந்த விஷயங்கள் அவ்வளவு முக்கியமல்ல. கடவுளைப் பங்கு பண்ணிக் கணக்கிட முடியாது. பரம் பொருளில் ஒரு சிறு பங்கும் பூரணமாகவே நிற்கும் என்பது சுருதி.

ஓம் பூர்ண மதஹ் பூர்ணமிதம்
பூர்ணாத் பூர்ண முதச்யதே
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ண
மேவா வசிஷ்யதே

''அங்கிருப்பது பூரணம். இங்கிருப்பதும் பூரணம். பூரணத்திலிருந்து பூரணம் உண்டாகியுள்ளது. பூரணத்தினின்று பூரணத்தை எடுத்த பிறகும் மிஞ்சி நிற்பது பூரணமே.''

பரம்பொருள் பௌதிகக் கணித நூல் நியதிக்கு அடங்காது.

★ ★ ★

நான்கு பேர்களுக்கும் அரச குமாரர்களுக்கு விதிக்கப்பட்ட எல்லாப் பயிற்சிகளும் தரப்பட்டன. குழந்தைப் பருவத்திலிருந்து லக்ஷ்மணனுக்கும் ராமனுக்கும் விசேஷப் பிரியம் வளர்ந்து வந்தது. அப்படியேதான் பரதனுக்கும் சத்ருக்னனுக்கும் பரஸ்பரம் அதி அன்பு. எப்போதும் கூடவே இருப்பார்கள். இதுவும் தாய்மார்கள் பாயசம் அருந்திய



# சக்கரவர்த்தித் திருமகன்




முறையிலிருந்து உண்டாகிய நெருங்கிய பற்று என்று வைத்துக் கொள்ளலாம்.

நான்கு குமாரர்களைப் பெற்று, அவர்களுடைய குணங்களும் சாமர்த்தியமும் பிரீதியும் தேஜசும் வளர்ந்து சிறப்புற்று வர, தசரத மகாராஜன் தேவர்களால் சூழ்ந்த நான்முகக் கடவுளைப் போல் திருப்தியாக இருந்து வந்தான்.

ஒருநாள் தசரதன் தன்னுடைய மந்திரிகளுடன் உட்கார்ந்து குமாரர்களுக்கு விவாகம் செய்வதைப் பற்றி யோசனை செய்து கொண்டிருந்தான். அப்போது காவல் அதிகாரிகள் பரபரப்புடன் உள்ளே வந்து, ''விசுவாமித்திர மகா முனிவர் அரசனைக் காணக் காத்திருக்கிறார்'' என்றார்கள். விசுவாமித்திரர் என்றால் எல்லாருக்கும் பயம்.

மகா சக்தியும் புகழும் பெற்ற முனிவர் எதிர்பாராதபடி தன்னைக் காண வந்திருக்கிறார் என்று தெரிந்ததும் தசரதன் தன் ஆசனம் விட்டு எழுந்து, முனிவரை எதிர்கொண்டு வரவேற்று, முறைப்படி ஆசனத்தில் அமரச் செய்தான்.

விசுவாமித்திர முனிவர் ஓர் அரசனாக இருந்து, பிறகு தவஞ் செய்து முனிவரானவர். தவத்திலும் வெகு பாடுபட்டு வெற்றி பெற்றவர். ''மடங்கல் போல் மொய்ம்பினான்'' அதாவது, சிம்மத்தின் பலம்கொண்டவர் என்கிறார் கம்பர்.

மடங்கல்போல் மொய்ம்பினான்
முன்னர் மன்னுயிர்
அடங்கலும் உலகம்வேறு
அமைத்துத் தேவரோடு
இடங்கொள் நான்முகனையும்
படைப்பன் ஈண்டுஎனாத்
தொடங்கிய கோசிக முனிவன்...

முன்னொரு காலத்தில் புதியதொரு பிரம்மாவையே உண்டாக்கி ஒரு புதுப் பிரபஞ்சத்தையும் சிருஷ்டி செய்து விடுவேன் என்று தொடங்கித் தம் தபோ பலத்தால் நட்சத்திரங்களை உண்டாக்கி, ஆகாயத்தின் தென்பாகத்தில் நிலைக்கச் செய்தவர். தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிப் புது சிருஷ்டியை

அந்த அளவில் நிறுத்திக் கொண்டார். இவை ராமாயண நிகழ்ச்சிக்கு முன்பு.

★ ★ ★

விசுவாமித்திரர் முனிவராவதற்கு முன், கௌசிக ராஜாவாக இருந்த காலத்தில் தம் சைன்யத்துடன் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டு போகும் சமயம், ஒருநாள் வசிஷ்ட மகரிஷியின் ஆசிரமத்துக்குச் சென்றார். அங்கு வசிஷ்ட மகா முனிவரை நமஸ்கரித்து அவரிடம் தாமும் மரியாதை பெற்றுக் கொண்டார்.

க்ஷேம சமாசாரம் விசாரித்த பிறகு ''உமக்கும் உம்முடைய ஆட்களுக்கும் நான் அதிதி உபசாரம் செய்து போஜனம் செய்வித்துக் கௌரவம் அடைய வேண்டும். இந்த ஆசையை நிறைவேற்று வீராக'' என்று வசிஷ்டர் சொன்னார்.

விசுவாமித்திரர் ''சுவாமி, தாங்கள் எனக்கு ஜலம் தந்து செய்த உபசாரமே பெரிய விருந்தாக வைத்துக் கொள்ளுகிறேன். தங்களைத் தரிசித்ததே என் பாக்கியம். 'உனக்கு அதிதி பூஜை செய்ய விரும்புகிறேன்' என்று தாங்கள் சொன்ன வார்த்தைகளே எனக்கும் என் சேனைக்கும் செய்த பெரும் விருந்தாகும். எனக்குப் போக விடைகொடுத்தருள வேண்டும்'' என்றார்.

ரிஷியாசிரமத்தில் பெரும் சேனையோடு வந்த ஒரு அரசனுக்கு எவ்வாறு விருந்து செய்விக்க முடியும்? ஆனபடியால் வசிஷ்டர் சொன்னது சாதாரண உபசார வார்த்தையாக வைத்துக் கொண்டு விசுவாமித்திரர் மேற்கண்டவாறு சொன்னார்.

ஆனால் வசிஷ்டர் போஜனம் செய்தே போக வேண்டும் என்று நிர்ப்பந்தித்தார்.

விசுவாமித்திரர், ''கோபித்துக் கொள்ளக் கூடாது. தங்களுடைய போஜன உபசாரத்தை நான் இகழ்ந்ததாக வைத்துக் கொள்ள வேண்டாம். எனக்கும் என்னுடைய பெரும் பரிவாரத்துக்கும் இவ்விடம் எப்படி போஜன பதார்த்தங்கள் திடீர் என்று கிடைக்கும்? இதற்காகத்தான் கவலைப்படுகிறேன்'' என்று வியக்தமாகச் சொன்னார்.

வசிஷ்ட முனிவர் புன்னகை செய்து, தம் பசுவை அழைத்து ''குழந்தாய், சபலையே! அரசனுக்கும் பரிவாரத்துக்கும் வேண்டிய போஜனம் உடனே தந்து உபசரிப்பாய்'' என்றார்.

★ ★ ★

அப்போது கௌசிகராஜன் திகைத்துப் போகும்படியான ஓர் அற்புத நிகழ்ச்சி நடந்தது. அரசனுடைய பரிவாரத்துக்கும் பெரும் சேனைக்கும் வேண்டிய அளவில் அநேக விதமான ருசியான பதார்த்தங்கள் தாமாகத் தோன்றிக் குவிந்து விழுந்தன. அன்ன பான வகைகள், பணியாரங்கள், நெய், தயிர், புஷ்பம், வாசனைத் திரவியங்கள் ஒன்றும் விடாமல் எல்லாம் மனத்தில் நினைத்த மாத்திரத்தில் ஆசிரமத்தில் எல்லோருக்கும் பரிமாறப்பட்டன. கௌசிகருடைய பத்தினிமார்கள், மந்திரிகள், சேனையாட்கள், வேலையாட்கள், அனைவரும் ரிஷியாசிரமத்தில் திருப்தியாக விருந்து உண்டு, ரிஷியின் தபோ பலத்தைக் கண்டு வியப்பில் மூழ்கினார்கள்.

விசுவாமித்திரர் தம்முடைய நன்றியைத் தெரிவித்து விட்டு முடிவில் வசிஷ்டரைக் கேட்டுக் கொண்டார்.

''இந்தச் சபலையை எனக்குத் தர வேண்டும். இதன் சக்தியை நான் கண்டேன். இத்தகைய பொருள் ராஜ தருமத்தின்படி அரசனுக்கே உரியது'' என்றார்.

இதைக் கேட்ட வசிஷ்டர் மிகவும் வருத்தப்பட்டார். சபலையை விட்டுத் தாம் பிரிய முடியாது. அதற்குப் பல காரணங்கள் உண்டு என்று சொல்லி, கொடுக்க மறுத்து விட்டார்.

மறுக்க மறுக்க அரசனுக்கு ஆசை அதிகரித்தது. இதைத் தருவேன், அதைத் தருவேன் என்று கௌசிகர் வசிஷ்டருடைய மனத்தை மாற்றப் பார்த்தார். முடியவில்லை. வசிஷ்டர் ஒரே உறுதியாக ''இந்தப் பசுவுக்கு விலையாக நீர்

கொடுக்கக்கூடிய செல்வம் அனைத்தும் எனக்குக் கொடுத்தாலும் பயனில்லை. சபலையைக் கொடுக்க மாட்டேன்'' என்று சொல்லி விட்டார்.

அதன் பேரில் விசுவாமித்திரர் கடுங் கோபம் கொண்டு, தம் சேனை யாட்களுக்கு உத்தரவிட்டுச் சபலை யைப் பலவந்தமாக இழுத்துப் போகப் பார்த்தார்.

சபலை கண்ணீரும் கம்பலையு மாக, ''நான் ரிஷிக்கு என்ன அபராதம் செய்தேன்? ஏன் என்னைக் கை விட்டார்? இவர்கள் என்னை இழுத்துக் கொண்டு போகப் பார்க்கிறார்களே! என் எஜமானராகிய முனிவர் சும்மா பார்த்துக் கொண் டிருக்கிறாரே!'' என்று சுற்றி நின்ற சேனையாட்களை முட்டித் துரத்தி விட்டு வசிஷ்டரிடம் சரண மடைந்தது.

தன் அருமைப் பசு கூடப் பிறந்த தங்கையைப் போல் சோகத்தால் கதறு வதைப் பார்த்து வசிஷ்டர், ''குழந்தாய், உன்னை இம்சிக்கும் இவர்களைத் தாக் கும்படியான சேனையை நீ உண்டாக்கு வாயாக!'' என்று சொல்லி விட்டார்.

உடனே அப் பசு, ''ஹூம், ஹூம்'' என்று கர்ஜித்துக் கர்ஜித்து எண்ணிறந்த வீரர்களை உண்டாக்கி விசுவாமித்திர ருடைய ஆட்களைச் சிதற அடித்தது.

இதைக் கண்ட விசுவாமித்திரர், கண்கள் சிவந்து அடங்காக் கோபங் கொண்டு, ரதம் ஏறிப் பாணங்களைப் பிரயோகித்தார். சபலையும் புதிய புதிய படை வீரர்களைத் தன் உடலிலிருந்து வெளிப்படச் செய்து விசுவாமித்திரரை முறியடித்து அவர் பெருஞ் சேனையை யும் நாசம் செய்தது. போர் முற்றிப் போயிற்று. விசுவாமித்திரருடைய குமா ரர்கள் வசிஷ்டரையே கொல்ல வந் தார்கள். வசிஷ்டர் அவர்களைப் பார்த்து வாயால் அதட்டியதும் சாம்பலா னார்கள்.

அவமானமடைந்த விசுவாமித்தி ரர் முகக் காந்தியை இழந்து அந்த இடத்திலேயே தம் ராஜ்யத்தை ஒரு மக னிடம் ஒப்படைத்து விட்டு, வசிஷ்டரை எப்படியாவது அடக்க வேண்டும் என்று உமாபதியை நோக்கித் தவஞ் செய்ய இமயமலைச் சாரலுக்குப் போய் விட்டார்.

# 5. பிரம்ம தண்டம்

விசுவாமித்திரருடைய உக்கிர தவத்தைக் கண்டு பரமசிவன் மகிழ்ந்து கௌசிகருக்குத் தரிசனம் தந்தார்.

''அரசனே! உனக்கு என்ன வேண் டும்? எதை விரும்பித் தவம் செய்தாய்?'' என்று மகாதேவர் கேட்டார்.

விசுவாமித்திரர் கைகூப்பி வணங்கி ''சுவாமி, என் தபசு உமாபதிக்குத் திருப்தி தந்திருந்தால் தனுர் வேதத்தை எனக்குப் பூரணமாக அருள வேண்டும். சகல அஸ்திரங்களும் எனக்கு வச மாக்கித் தந்தருள வேண்டும்'' என்றார்.

''அப்படியே ஆகட்டும்'' என்று சொல்லி, தேவர்கள், தானவர்கள், கந்தர் வர்கள், ரிஷிகள், யக்ஷர்கள், ராக்ஷ ஸர்கள் அனைவரும் அடைந்த எல்லா அஸ்திரங்களையும் விசுவாமித்திரருக்கு மகாதேவர் தந்தார்.

* * *

பரமேசுவரன் தந்த வரத்தைப் பெற்றுக் கொண்டு விசுவாமித்திரர் திரும்பினார். தவத்தால் தாம் அடைந்த சக்தியைக் குறித்துப் பருவ கால சமுத்திரத்தைப் போல் அகங்காரம் பொங்கி 'வசிஷ்டரைத் தீர்த்து விட்டேன்' என்று தமக்குள் எண்ணிக் கொண்டே திரும்பினார்.

நேரே வசிஷ்டர் ஆசிரமத்துக்கே சென்றார். விசுவாமித்திரர் கோபத்தோடு யமனைப் போல் வருவதைக் கண்டு வசிஷ்டரின் ஆசிரமத்திலிருந்த சீடர்களும் பிராணிகளும் திகில் கொண்டு மூலைக்கு மூலை ஓடினார்கள்.

**வி**சுவாமித்திரர் விட்ட ஆக்னேயாஸ்திரத்தின் வேகத்தால் ஆசிரமம் எரிந்து சாம்பலாயிற்று. ''பயப்பட வேண்டாம்'' என்று வசிஷ்டர் எவ்வளவு சொன்னாலும் சிதறி ஓடுகிறவர்கள் பயம் தாங்காமல் ஓடிக் கொண்டேயிருந்தார்கள்.



**அவர் : ஒரு வாரமா முதுகுப் பிடிப்பு தலைவரே!**

**தலைவர் : சால்ஜாப்பு சொல்லாம ஒழுங்கா கால்ல விழும்!**

**– அம்பை தேவா**

வசிஷ்டர் இதைக் கண்டு வருத்தப்பட்டு 'இந்தக் கௌசிகருடைய கர்வத்தை அடக்க வேண்டும்' என்று காலாக்னி போல் ஜொலிக்கும் தம் பிரம்ம தண்டத்தைக் கையில் எடுத்து, ''மூடனே!'' என்றார்.

விசுவாமித்திரர் ஆக்ரோஷங் கொண்டு, ''ஏய், வசிஷ்டரே! நில்லும், நில்லும்!'' என்று அதட்டி, தாம் புதிதாகக் கற்ற ஆக்னேயாஸ்திரத்தை அவர் மேல் விட்டார்.

வசிஷ்ட மகா முனிவர், ''நான் ஓடவில்லை. இதோ நிற்கிறேன்'' என்று கூறிப் பிரம்ம தண்டத்தைத் தமக்கு முன்னே நிறுத்தினார். விசுவாமித்திரருடைய அஸ்திரமெல்லாம் தண்ணீரைக் கண்ட நெருப்பைப் போல் அணைந்து நின்றன.

**பி**றகு விசுவாமித்திரர் தாம் கற்ற அஸ்திரங்கள் அவ்வளவையும் பிரயோகித்தார். அவை அனைத்தையும் வசிஷ்டருடைய பிரம்ம தண்டம் விழுங்கிற்று. முனிவர் சுகமாக நின்றார். இந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்டு விசுவாமித்திரர் பிரம்மாஸ்திரத்தை விடுத்தார்.

'பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்து விட்டாரே, என்ன கதியாகுமோ' என்று ரிஷிகளும் தேவர்களும் கவலையுற்றார்கள். முனிவருடைய பிரம்ம தண்டம் அரசனுடைய பிரம்மாஸ்திரத்தையும் விழுங்கி விட்டது. அஸ்திரத்தை உட்கொண்ட வசிஷ்டரின் பிரம்ம தண்டத்தினின்று நெருப்புப் பொறிகள் சுற்றிலும் பறந்தன. வசிஷ்டருடைய உடலும் அற்புதமாக ஜொலித்தது.

விசுவாமித்திரர் பிரமித்துப் போனார். பெருமூச்செறிந்து, ''நான் தோற்றேன். க்ஷத்திரிய பலம் என்னத்துக்காகும்? இந்த ரிஷி ஒரு கோலை வைத்து நான் விடுத்த அஸ்திரங்களையெல்லாம் விழுங்கித் தீர்த்தார். பரமசிவன் என்னை ஏமாற்றி விட்டார். இவரைப் போல் நானும் பிரம்ம ரிஷியாக வேண்டுமேயொழிய வேறு வழியில்லை'' என்று யுத்தத்தை நிறுத்தி மறுபடி கடுந்தவம் செய்வதற்காகத் தென்புறம் சென்றார்.

★ ★ ★

**பி**ரம்மாவை உபாசித்து அனேக ஆண்டுகள் தவம் செய்தார். முடிவில் நான்முகன் பிரஸன்னமானான். ''குசிக புத்திரனே! உன் தவத்தால் ராஜரிஷிப் பதவியை அடைந்தாய்'' என்று விசுவாமித்திரரை ஆசீர்வதித்து விட்டு மறைந்தான்.

தாம் செய்த கோரமான தவமெல்லாம் ராஜரிஷிப் பதவியைத் தானே தந்தது என்று துக்கமடைந்து, இன்னும் மிகக் கோரமான தவங்களைச் செய்யலானார்.

(தொடரும்)

# தேவராஜன் மாறிப்போனான்!

நள்ளிரவு தாண்டியதும் வரும் விழிப்பாயிருக்கும். படுக்கை விட்டெழுந்து நீவாய்த் தனியே நிற்கும் பாத்ரூம் போவதற்காக விளக்கைப் போட்டுக் கொண்டு வெளிவர, எதிரே தள்ளி நின்ற மாடி வீட்டு ஜன்னல் விளக்கு அணைந்து போயிற்று.

நிசப்த இரவை வயோதிக இருமல் அடுக்குகள் கலைத்தன. மரங்கள் அசைவின்றி, சொற்ப சுவாசித்தலின் அவஸ்தையிலிருந்தன. அண்ணாந்து பார்க்க ஆகாயம் மட்டுப்படாத ஆழியிருட்டில் இருந்தது. எதனோடும் ஒட்டாத தனிமை வந்தது. வெறுமனே உணர்வில்லை. உண்மை.

இப்படியே இருந்தாலும் இல்லை உறங்கிப் போனாலும் பொழுது விடியும், அவிழ்கின்ற முடிச்சாய். அடி பைப்பில் போராட காற்றுக் குமிழ்களோடு தண்ணீர் வரும். முதல் குவளையில் குளிர் சொலேரென அடித்துப் போக, அடுத்தடுத்து அது மறக்கும்.

சாமி கும்பிட எப்போதாவது நினைப் போடும் ''காஃபி...'' குரல் கேட்க எடுத்துக் குடிக்கிற மௌனம் சம்பவிக்கும்.

தினசரி படித்து, பவுடர் அடித்து, தலை வாரி, பனியன் அணிந்து, கண்ணாடியில் சலனமின்றி முகம் பார்த்து, சாப்பிட்டு, கையில் டிபன் பாக்ஸ் எடுத்து, செருப்பை மாட்டி வெளியே வர, அவனைப் போலவே சைக்கிளும் நிற்கும். புன்னகை எதுவுமில்லை. விடிந்ததிலிருந்து இதுவரை ஒரு வார்த்தை? எதையாவது யாரும் சொல்லக் கேட்பதுடன் சரி. பதில் வராத தவமாய் நீண்டது தொடர சைக்கிளில் பயணம் போகும்.

வழியெங்கும் பேச்சுக்கள். சளசளவென்று, சூடான எண்ணெய்யில் ஜிலேபிக் குப் பிழிந்தது போல். யாரையாவது பற்றி. எதையாவது தொட்டு. என்ன இது? ஏமாற்று வேலை. அவசியமின்றி சக்தி விரயம். புத்திச் சுளுக்கு.

ஓயாது பேசுகிறவர்கள் பாவம் செய்தவர்கள். தொண்டை கமறத் தண்ணீர் அருந்தி இன்னும் எச்சில் தெறிக்கப் பேச மனம் வறளும். யாருக்குத் தெரியும்?

அலுவலகத்தில் மௌன குரு ஸ்வாமி. எட்டு மணிக்குச் சரியாய் வேலை இருக்க அதில் ஈடுபடுவதே உத்தமம். லஞ்ச் பிரேக்கில் சாப்பிடு. கொஞ்சம் கண்ணயர்ச்சி. கர்ச்சீப்பில் முகம் மூடி களைப்பை மறக்க, பூடகமாய் வாய் பொத்திச் சிரிக்கும் கண்கள். போகட்டும். இயல்பு அப்படி.

''தேவா... கொஞ்சம் வாங்க...'' இண்டர்காமில் ஏ.ஓ.

எழுந்து, இறக்கைக் கதவுகளைத் தள்ளிப் போக, எதிரில் ஏ. ஓ.

''லோனுக்கா அப்ளை பண்ணியிருக்கீங்க?''

''எஸ் ஸார்...''

''என்ன இஷ்யூ?''

''தங்கையோட கல்யாணம்....''

''ஓஹோ...'' வெற்றிலைக் கறை படிந்த பற்கள். ''மாப்பிள்ளை பார்த்தாச்சா...?''

''ம்... ஏற்பாடெல்லாம் கழிஞ்சாச்சு...''

''இதுக்கு முன்னால அம்மாவுடைய ஹார்ட் சர்ஜரிக்கு வாங்கின ட்யூ எல்லாம்...?''

''கட்டியாச்சு...''

''சரி... ரெகமண்ட் பண்ணிடலாம்... வர்றதுக்குத்தான் கணக்கும். மினிமம் டூ மன்த்ஸ்...''

''கிடைச்சாச் சரிதான்...'' - அவசியத்துக்குப் போகாமல் இருக்க முடியாது. இருக்க வேண்டாம்.



எதிர்ப் பார்வையில் சைக்கிள். முன் வீல் ஒரு பக்கம் வளைந்து, முதுகு சொறிய முற்படும் நாய் போல் நின்றது.

தமயந்தி வந்து, சேரை இழுத்துப் போட்டு உட்கார்ந்தாள். சத்தம் காதைப் பிறாண்டியது.

''மொசைக்ல இழுக்காதன்னு எத்தினி தடவ சொல்றது?''

''வாடகை வீடுதானே? ஆமா... லோன் கிடைக்கடுமா?''

''அம்மாகிட்டச் சொன்னேன்...''

''எனக்கும் சொல்லணும்... பெரிய திருப்தியாக்க... மூத்ததாப் பொறக்குறது பெரிய தொந்தரவு... நாளைக்கு டாக்டர் கிட்டே போவணும்...''

''.........''

''நாளு தள்ளியிருக்கு... என்னன்னு கேட்டுக்கணும்...''

''யாரு?''

## ஜியா

''நரசிம்மன்... அவருக்குத்தான் நல்ல கைராசியிருக்கு. கிளினிக்ல எறும்பு மொச்சாப்புல கூட்டம்... நமக்கும் நல்ல சேதி வரும்...''

டால்ஃபின் பள்ளி மைதானத்தில் ஒரே இரைச்சல். கிரிக்கெட் விளையாடு வார்கள். மட்டரகமாய்ப் பேசிக் கொண்டு, பராக்கிரமம் காட்டிக் கொண்டு. நல்ல விளையாட்டுக்காரன் பேச மாட்டான். அவனுக்கு அதற்கு நேரமிருக்காது.

வாசலில் நிழலாடியது. உள்ளே டீ.வி. யில் எதற்கோ சங்கு ஊதினார்கள். மூன்று பேர். பெண்கள் தயங்கி நிற்க, வந்தவர் எதையோ எதிர்பார்த்து நிற்க, புரியாமல் ''என்ன வேணுங்க?'' என்றான்.



''என்னங்க இது... இவங்களைத் தெரி யலையா...? நம்ப செண்பகத்தூர் சம்பந்தி வீட்டுக்காரங்க... உள்ள வாங்க... வாங் கம்மா...'' தமயந்தி இடையே வந்து நிலை மையை சகஜமாக்கி, வாயார வரவேற்று உள்ளே கூட்டிப் போனாள்.

தம்பி தூக்குவாளி எடுத்துக் கொண்டு எக்ஸ்ட்ரா பால் வாங்கப் போனான். உள்ளே விஸ்தாரமாய்ப் பேச்சு நடந்தது. உள்ளே போகவில்லை. அவர்களுடன் எதையாவது சம்பாஷிக்கலாம் என்று தோன்றவில்லை. என்ன பேசுவது? நிச்சயதார்த்தம் முடிந்து போன விஷயம். எங்கேயோ நார்த் இண்டி யாவில் வேலை செய்கிற மாப்பிள்ளையின் அக்காவுடைய புருஷன், பெண் வீடு பார்க்க வந்திருப்பார். இதில் அவனின் பங்கென்ன? 'பொண்ணுக்கு மூத்த அண்ணன்' என அறிமுகமாகி சிரிப்போடு கும்பிடு போட வேண்டுமா?

தம்பி செருப்பு சப்திக்க வந்து கழற்று வது போல் உதறி விட்டுப் போனான். தூக்கு வாளி மெள்ளமாய் ஆடியது. பால் கனம். மனம் பேப்பரில் லயிக்காமல் தெருவில் போன நடமாடும் சலவை வண்டியைப் பார்த்தது. 'அயர்ன்...' எப்போதாவது எழும் குரல். அவ்வளவே. நெருப்புக் கனன்று கரி பூத்திருக்கும். கவனம் அதில்தான். துணிக் கேற்றபடி அழுத்தம் கொடுத்து, சுருக்கம் களைந்து... ம்... வேலை. கூடவே சேவை, அதிக விளம்பரமின்றி.

அவனைப் பற்றி என்னவோ பேசுவது கேட்டது. ப்ச்... என்ன பேசுவார்கள்? 'இதென்ன உம்மணாம்மூஞ்சி!'

> அமைச்சர் : நமது இளவரசரைத் தேர் ஓட்ட அனுமதிக்க வேண்டாம் என்றேனே கேட்டீர்களா?
>
> மன்னர் : ஏன்? என்னாயிற்று?
>
> அமைச்சர் : அதோ பாருங்கள்! ஆராய்ச்சி மணியை நோக்கிப் பசு மாடுகள் கூட்டமாக வந்து கொண்டிருக் கின்றன!
>
> – ரா. நாச்சிமுத்து



வாசலில் இலைக் கட்டு விற்றுக் கொண்டு போக கூப்பிட்டு நான்கு வாழை இலைகளை வாங்கிக் காசு கொடுத்தான்.

கொஞ்ச நேரத்திலேயே வந்தவர்கள் புறப்பட, ஸ்டூலின் மேல் வாங்கிய இலை கள் சுருட்டப்பட்டிருந்தன.

இலேசாய்த் திரும்பிச் சிரித்து விட்டுப் போனார்கள். ''வர்றோம்.''

தமயந்தி இலைக் கட்டை எடுத்துப் போனாள். 'ரெண்டு வார்த்தை பேசினா முத்தா உதிர்ந்து போகும்?' முனகியது கேட்டது. பேசாவிட்டால் என்ன குறைந்து போய் விடும்?

''கஷ்டம்ப்பா இது...''

''............''

''ரிக்ஷாவிலே வந்திருக்கலாம்... இல் லேன்னா ஆட்டோவில...'' சைக்கிள் மெது வாய் ஓடியது.

''உங்களுக்கு சந்தோஷமாவே இல் லையா?''

''ம்....ம்....''

''ஒலிவிக்லேர்ந்து அப்படியே எங்கா வது போயிருக்கலாம்...''

''சொல்ல வேண்டியதுதானே?''

''உங்களுக்குத் தோணவேயில்லே...?''

வளைவு திரும்ப எதிரில் பிரகாச ஹெட் லைட்டோடு கார் ஒன்று வர கண் கூசித் தடு மாறிக் கால் ஊன்ற தமயந்தி 'டக்'கென்று குதித்தாள்.

''என்ன ஒரு முன்னெச்சரிக்கை...?''

''உங்க குழந்தையிருக்குங்க என் வயித் திலே''

இருட்டில் இலேசாய் அவன் சிரித்தது அவளுக்கு ஆச்சரியமாயிருந்திருக்கும்.

தங்கையின் திருமண வீடியோ கேஸட் ஓடிக் கொண்டிருக்க, சுற்றமும் நட்பும் உட்கார்ந்து, ஒவ்வொருவரின் வருகையை யும், செய்கையையும் விமர்சித்துக் கொண் டிருக்க தேவராஜன் சைக்கிளைக் கழுவிக் கொண்டிருந்தான்.

''அந்த வெள்ளைச் சட்டை தேவராஜன் மச்சானா? எப்படி கவரேஜ் பண்ண வுட்டாரு... எல்லாரும் ஜோராக் கைதட்டுங் கப்பா... ஹீரோ போல போஸ் கொடுக் கிறாரே...'' தமயந்தியின் தம்பி சொல்ல கூடம் குலுங்கியது.

கொண்டையில் ஒலிபெருக்கிக் குழாய் கட்டிக் கொண்ட ஜீப் ஒன்று துண்டுப் பிரசு ரங்களோடு ஊர்ந்து போனது. வாசலில் வந்து விழுந்த காகிதங்களை எடுத்து 'ரிம்' மிலிருந்த ஈரம் துடைத்துப் போட்டான்.

இரவு எப்போது வரும் என்றிருந்தது. எல்லாவற்றையும் சட்டாம்பிள்ளையாய்

''மானேஜர் கோபத்தில் ஏதோ சொல்லிட்டாருன்னு உடனே வீட்டுக்குக் கிளம்பிட்டாயே, அப்படி என்ன சொன்னார்?''

''Go to hell'னு சொன்னாரு. சரின்னு வீட்டுக்குக் கிளம்பிட்டேன்.''

– எம். அசோக்ராஜா





இன்ஸ்பெக்டர் : எதுக்குப்பா ஸ்டேஷன் கட்டடத்துக்கு திருஷ்டி சுத்தறே?

கான்ஸ்டபிள் : ஆரம்பித்துப் பத்து வருஷமாகியும் ஒரு கற்பழிப்பு சம்பவம் கூட நடக்காத ஸ்டேஷன்னு எல்லோரும் கண் போடறாங்க!

- உ. ராஜாஜி

அதட்டி, அடக்கிப் போட்டு விட்டு, அது பண்ணும் ராஜ்ஜியத்தில் கட்டுண்டு கிடக்கலாம், எப்போதைக்கும்.

இப்போதெல்லாம் தமயந்தி அடிக்கடி அழுகிறாள். கழுத்தைக் கட்டிக் கொண்டு தூங்குகிறாள். சினிமாவில், கதைகளில் வருவது போல் தலை வருடிப் பேச வேண்டுமென ஏன் அவனுக்கு எண்ணம் வருவதேயில்லை?

''இங்க எல்லாத்துக்கும் நான்தானா? மூத்தவன் அவன்னு ஒரு பொறுப்பு வேணாம்? சாமியாரு மாதிரி முன் வாசல்ல உட்கார்ந்திட வேண்டியது... எல்லாம் சரியாப் போயிடுமா...? மனசில உள்ளதையும் சொல்றதில்லே... தங்கச்சி கல்யாணம் வரைக்கும் இந்த வீடு தேவையிருந்துச்சு... இப்போ வேண்டியதில்லே... எங்கியாவது கம்மியான வாடகைல பார்த்துட்டுப் போயிடலாம்.... ஆபீஸ்ல நாலு பேர் கிட்டச் சொல்லி வெச்சா ஆயிரம் வீடு வரும்... பேசினாத்தானே?''

தமயந்தி பிறந்தகம் போய் விட்டாள். தேவராஜன் இல்லை என்ற நினைப்பில் தம்பி பேசிக் கொண்டிருந்ததை நுழைகிற தருவாயில் கேட்டான் அவன்.

அம்மா, ''அவன் நடப்புத் தெரிஞ்சது தானே... இனிமேலா மாறப் போறான்? அவன் வீடு பார்க்காட்டி என்ன? நீ பாரு... எல்லாம் ஒண்ணுதானே? லோனு வேற மாசா மாசம் புடிச்சுக்கிட்டுத்தான் கொடுப்பாங்க... கைப் புள்ளையோட வந்துடுவா அண்ணியும்... செலவு மூச்சைப் பிடிக்கும் தான்...'' கவலைப்பட்டாள்.

சைக்கிளை நிறுத்தி ஸ்டாண்ட் போட்டு விட்டு, முன் வாசல் படியிலேயே உட்கார்ந்து கொண்டான். தம்பியும் அம்மாவும் பேசியதைக் கவனிக்காமலிருந்தான்.

எல்லாம் முடிந்து வெளிப்பட்ட தம்பி அவனைப் பார்த்ததும் முகம் வெளிறினான். தயங்கி ''புதுக்கோட்டைக்குப் பக்கத்தில பஸ் பாடி கட்டுற தொழிற்சாலை ஒண்ணு இப்பத்தான் ஆரம்பிச்சிருக்காங்க... மெக்கானிக் வேலைக்கு விளம்பரம் வந்திருக்குது... பத்து ரூபாய் கேட்கிறாங்க... டைரக்டா போஸ்டிங் போடுவாங்களாம்...'' வேறு ஏதோ சமயத்தில் கேட்கவிருந்ததை அப்போது கேட்டான்.

''யாரு சொல்றது?''

''மாசிலாமணி சித்தப்பா... அவரு பையனை அப்படித்தான் நுழைச்சாங்களாம்... பைசா இல்லாம என்ன நடக்குது இப்போவெல்லாம்?''

''பார்க்கலாம்...'' எங்கே போய் துண்டு விரிப்பது?

''இவ்வளவு நாள் வீணாய்ப் போனது போதாதா? ஏதாவது பண்ணணும்... சரஸ்வதி கல்யாணத்தை முடிச்சாச்சில்லே...''

''ம்...'' தமயந்தியும் இல்லை. ஏதாவது யோசனை சொல்வாள்; இல்லை. கையில், கழுத்திலிருப்பதைக் கழற்றித் தருவாள்.

''சரி உங்க சைக்கிள் எடுத்துட்டுப் போறேன்...'' என்று சொல்லி விட்டு விருட்டென்று ஏறிப் போனான். அவனைப் பொறுத்தவரைக்கும் லட்சியவாதி.

அவன் போன கொஞ்ச நேரத்துக்கெல்லாம் தந்தி வந்தது. கையெழுத்திட்டு வாங்கிப் படித்து விட்டு உள்ளே ஓடினான். அம்மா காப்பி போட்டு தம்ளரில் நுரை பொங்க ஆற்றிக் கொண்டிருந்தாள்.

''பையன் பொறந்திருக்காம்மா...'' இத்தனை சப்தமாய், மலர்ச்சியாய் அவனைப் பார்த்திராத அம்மாவுக்கு திகைப்பில் விழுந்தது முகம். இருட்டு வர ஆரம்பித்திருந்தது. சுயம் வெளிப்பட தேவராஜன் அம்மாவைக் கட்டிக் கொண்டான்.

# நம்பிக்கை தொடர்கிறது



விடிகாலையில் எழுந்தவன் சுவர்க் கடிகாரத்தைப் பார்த்தான். ஐந்து மணி ஆகியிருந்தது. வெளியே மார்கழிப் பனி அடர்த்தியாய் மூடியிருந்தது.

இப்போது தயாராகிப் புறப்பட்டால் தான் சரியாக இருக்கும். எப்படியும் இரண்டு மணி நேர நடையில் அந்த வேலை வாய்ப்பு அலுவலகத்தை அடைந்து விடலாம்.

சட்டையை அணிந்து கொண்டு வெற்றுப் பாக்கெட்டை தடவிப் பார்க்க, அம்மா எழுந்து வந்தாள்.

அவள் முகத்தில் ஏகமாய் ஆதங்கம். முந்தானையிலிருந்து ஒரு ரூபாய்த் தாளை எடுத்து, அவனிடம் கொடுத்தாள்.

''நல்லபடியாப் போயிட்டு வாப்பா. அப்பா விட்டுட்டுப் போன குடும்ப பாரம் உன் தலையில விழுந்திடுச்சு. கடவுள் புண்ணியத்துல உனக்கு ஒரு வேலை கிடைக்கட்டும். நீ வேலைக்குப் போய்த்தான் தங்கச்சி வசந்தாவுக்குக் கல்யாணம் நடக்கணும்.''

அம்மாவின் குங்குமம் இல்லாத நெற்றி அவள் மனத்தைப் போலவே வெறிச்சோடிக் கிடந்தது. சத்தியா தலையசைத்து விட்டுப் புறப்பட்டான்.

நடந்ததில் களைப்பாக இருந்தது. பசித்தது. சமாளித்துக் கொண்டு வேலை வாய்ப்பு அலுவலகத்தை அடைந்தான். அங்கு ஏற்கெனவே நிறையப் பேர் வரிசையாய் நின்றிருந்தார்கள். சத்தியா அவர்களைப் போல் வேலை வாய்ப்புக்குப் பதிவு செய்யவோ அல்லது வேலை வாய்ப்பு அட்டையைப் புதுப்பிக்கவோ வரவில்லை. வேலை வாய்ப்பு அதிகாரியைச் சந்தித்துக் கேட்க வேண்டும். பதிவு செய்து விட்டுப் பல வருடங்களாய்க் காத்திருந்தும் ஒருமுறை கூட நேர்முகத் தேர்வுக்கு கார்டு அனுப்பவில்லையே என்ற ஆற்றாமையை வெளிப்படுத்த வேண்டும்.

வாசலில் நின்றிருந்த பியூன் அவனை ஆயிரம் கேள்விகள் கேட்டான். பிறகு ஒரு மணி நேரம் காக்க வைத்து விட்டு உள்ளே அனுப்பினான்.

அதிகாரி அனந்தராமன் அப்படியொன்றும் கடூரமானவராய்த் தெரியவில்லை. நெற்றியில் சந்தனப் பொட்டுடன் பார்க்க அமைதியானவராய்த் தெரிந்தார்.

''என்னப்பா.. இன்டர்வியூ கார்டு வரலையா?''

''ஆமா சார். நான் பதிவு பண்ணி ஏழு வருஷத்துக்கு மேலே ஆயிடுச்சு. இதுவரைக்கும் ஒரு கார்டு கூட வரலை.''

''வாஸ்தவம்தான். நாங்களும் எவ்வளவோ முயற்சி பண்றோம். ஆனா நாளுக்கு நாள் வேலைக்குப் பதிவு செய்யறவங்க எண்ணிக்கை உயர்ந்துக்கிட்டே போகுது. லட்சக் கணக்குல கார்டுங்க குவிஞ்சு போயிருக்கு.''

''கொஞ்சம் கருணை காட்டுங்க சார். என் குடும்பம் என்னைத்தான் நம்பிக்கிட்டிருக்கு.''

''எனக்குப் புரியுதுப்பா. நான் என்ன பண்ண முடியும்? உனக்குச் சலுகை காட்டறதுக்கோ இல்லை முக்கியத்துவம் கொடுக்கிறதுக்கோ உனக்கு ஏதாச்சும் அனுபவம் இருக்கா?''

''இல்லை சார். எல்லோருமே வேலை கொடுக்காம அனுபவம் இருக்கான்னு கேட்டா எப்படி சார்?''

''சரி வேற ஏதாச்சும் தகுதியிருக்கா?''

''வேறன்னா...?''

''தாழ்த்தப்பட்ட ஜாதி, உடல் ஊனமுற்றோர், பர்மா அகதிகள், எக்ஸ் சர்வீஸ்... இப்படி ஏதாச்சும்.''

அவனுக்கு அந்த வேதனையிலும் சிரிக்க வேண்டும் போலிருந்தது. அடக்கிக் கொண்டான்.

''சார் நீங்க சொல்ற தகுதியெல்லாம் எனக்குக் கிடையாது. நான் பி.காம். முதல்



வகுப்புல பாஸ் பண்ணியிருக்கேன். நான் வறுமையான குடும்பத்துல பிறந்தவன். அதுவுமில்லாம இன்னும் ரெண்டு மாசத்துல எனக்கு வேலை வாய்ப்புக்கான வயது வரம்பு தாண்டப் போவுது.''

வேலை வாய்ப்புத் துறை அதிகாரி யோசனையாய்ப் பார்த்தார். அவர் முகத்தில் தெரிந்தது பச்சாதாப உணர்வா அல்லது கடமை உணர்வா என்பது தெரியவில்லை.

''சரி. நீ எதுக்கும் உன்னுடைய வேலை வாய்ப்பு அட்டை எண், பதிவு பண்ணின தேதி இதையெல்லாம் ஒரு பேப்பர்ல எழுதிக் கொடுத்துட்டுப் போ. என்னால முடிஞ்சதைச் செய்யறேன்.''

சத்தியா நன்றி தெரிவித்து விட்டு வெளியேறினான்.

ஒரு மாதத்திற்குப் பிறகு இன்டர்வியூ கார்டு வந்தது. நம்ப முடியாமல் பார்த்தான். அதுவும் ஒரு பெரிய தனியார் நிறுவனத்திற்கு.

வீட்டில் அம்மாவுக்கும் தங்கைக்கும் மகிழ்ச்சியாக இருந்தது. சத்தியா அந்த நிறுவனத்தில் என்னென்ன கேட்பார்கள் என்று யோசித்துப் பார்த்தான். தன்னிடமிருந்த பொது அறிவுப் புத்தகங்களைப் புரட்டினான். லைப்ரரிக்குச் சென்று அந்த கம்பெனி தயாரிக்கும் இரசாயனப் பொருட்களைப் பற்றி படித்துத் தெரிந்து கொண்டான்.

இன்டர்வியூ நாள் வந்தது. அம்மாவிடம் ஆசி பெற்றுக் கொண்டு ஆதங்கத்துடன் புறப்பட்டான். இன்டர்வியூ ஆரம்பம் ஆவதற்கு அரைமணி நேரத்திற்கு முன்னதாகவே கம்பெனியை அடைந்தான்.

கம்பெனியின் கட்டடம் அவனுக்கு பிரமிப்பைத் தந்தது. அப்பா! எவ்வளவு பிரம்மாண்டமான கட்டடம்!

ரிசப்ஷனை அடைந்த போது அங்கு ஏற்கெனவே பத்துப் பேருக்கு மேல் வந்து உட்கார்ந்திருந்தனர். அத்தனை பேரும் அதே இன்டர்வியூவுக்கு வந்திருந்தார்கள்.

மானேஜர் எங்கோ வெளியில் சென்றிருப்பதாகவும் இன்டர்வியூ நடக்க இன்னும் ஒரு மணி நேரமாகும் என்றும் ரிசப்ஷனில் அமர்ந்திருந்தவள் சொன்னாள். சத்தியா அவ்வளவு நேரம் அங்கு உட்கார்ந்திருக்க விரும்பவில்லை.

டீ குடிக்கலாம் என்று வெளியே வந்தான். அருகே இருந்த ஒரு டீக் கடைக்குச் சென்றான். அங்கே யாரோ இருவர் சீரியஸாய் இன்டர்வியூ விஷயமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''என்ன சுந்தரம் நிறையப் பேர் இன்டர்வியூவுக்காக வந்திருக்காங்க போலிருக்கு?''

''அப்படியா! என்ன இன்டர்வியூ?''

''சரிதான் போ. மானேஜருக்கு செகரட்டரியா இருந்துக்கிட்டு இது கூடவா தெரியலை? எல்லோரும் ஜூனியர் அகௌண்டெண்ட் வேலைக்கு வந்திருக்காங்களாம்.''

''ஓ அதுவா? அந்த வேலைக்கு எப்பவோ ஆளை செலக்ட் பண்ணியாச்சே. நம்ம மினிஸ்டர் பரமானந்தத்துக்கு யாரோ வேண்டிய ஆளாம். அவரு மூலமாத்தான் கம்பெனிக்கு எக்ஸ்போர்ட் லைசென்ஸ் கிடைச்சதாம். நேத்தே அப்பாயின்ட்மென்ட் ஆர்டரும் டைப் பண்ணி தபால்ல போட்டாச்சே.''

மதுமனோ

''அப்ப வந்திருக்கிறவங்கல்லாம்?''

''தெரிஞ்ச கதைதானே? சும்மா ஒப்புக்கு ரெண்டு மூணு கேள்வியைக் கேட்டுட்டு அனுப்ப வேண்டியதுதான். ஒழுங்கா முறைப்படி இன்டர்வியூ நடக்கலைன்னு பின்னால கம்பெனிக்குக் கெட்ட பேர் வரக் கூடாது பாரு, அதுக்குத்தான்.''

சத்தியா இடிந்து போனான். இப்படியொரு ஏமாற்றத்தை அவன் எதிர்பார்க்கவில்லை.

டீ கூட குடிக்கத் தோன்றாமல் அப்படியே நடந்தான். நடக்க நடக்க அவனுக்குக் கண்கள் இருட்டின. கால்கள் தடுமாறின. தன்னையும் அறியாமல் அவன் சாலையைக் கடக்க இருந்த நேரத்தில், பின்னாலிருந்து வேகமாய் வந்த லாரி ஒன்று, அவனை அடித்துத் தூக்கிப் போட்டது.

சத்தியா அதே இடத்தில் நினைவிழந்தான். பாதசாரிகள் அவனைத் தூக்கிக் கொண்டு ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள்.

மறுநாள் கண் விழித்துப் பார்த்தவன் அதிர்ந்தான். காலை அசைக்க முடியாத படிக்கு ஒரு பெரிய கட்டுப் போடப்பட்டிருந்தது. தலையிலும் பேண்டேஜ் சுற்றப்பட்டிருந்தது. நேற்றைய சம்பவம் நினைவுக்கு வந்தது. எதிரே அம்மாவும் தங்கையும் கண்கலங்க நின்றிருந்தனர். சத்தியா அந்த நிலையிலும் அம்மாவைச் சமாதானப் படுத்த முயன்றான்.

''அழாதீங்கம்மா. எல்லாம் விதி. இல்லேன்னா எதுக்கு இந்த விபத்து நடக்கணும்?''

''சாதாரண உடல் காயமா இருந்தாலும் பரவாயில்லேப்பா. இப்படி முழங்காலை எடுக்க வேண்டிய அளவுக்குக் கொடூரம் நடந்து போச்சேன்னுதான் மனசு பதறுது.''

சத்தியா பொங்கி வந்த துக்கத்தை அடக்கிக் கொண்டான். பிறகு நிமிர்ந்தான்.

''உங்க வேதனை எனக்குப் புரியுதும்மா. எப்படியாச்சும் எனக்கு வேலை கிடைக்கும்னு இத்தனை நாளாக் காத்துக் கிட்டிருந்தீங்க. கடைசியில எனக்கு இந்த கதி ஆயிடுச்சு. இதுவும் ஒரு வகையில நல்லதுதான்னு நினைக்கிறேன்.''

''என்னப்பா சொல்றே?''

''ஆமாம்மா. எனக்கு வேலைக்கான வயசு வரம்பு இன்னும் கொஞ்ச நாள்ல தாண்டப் போவுது. இந்த நேரத்துல இப்படியொரு விபத்து ஆயிட்டதாலே இதுவும் எனக்குச் சாதகம்தான். உடல் ஊனமுற்றோர் பிரிவிலயாச்சும் இனி வாய்ப்புக் கிடைக்கும்மா. நிச்சயம் வேலை கிடைக்கும்.''

அம்மாவும் தங்கையும் பேச்சின்றி நின்றிருந்தார்கள். அவர்கள் கண்களும் அழுது ஓய்ந்து விட்டன.

இனி?

புதிய விடியலாய் அவர்கள் வாழ்வில் மீண்டும் ஒரு நம்பிக்கை தொடரும்.

# சிவகாமியின் சபதம்

## முப்பத்தேழாம் அத்தியாயம்
## சத்ருக்னன் பீதி

சக்கரவர்த்தியிடம் சேனாதிபதி கூறிய வண்ணமே அன்று சூரியன் அஸ்தமித்த ஒரு முகூர்த்த நேரத்துக்கெல்லாம் யுத்த பேரிகை முழங்கியது. வாதாபிக் கோட்டையைச் சுற்றி நாற்புறமும் சூழ்ந்திருந்த பல்லவ வீரரின் மகா சைனியம் இடம் பெயர்ந்து கோட்டை மதிலை நோக்கி முன்னேறத் தொடங்கியது. காற்றில் அசைந்தாடும் கொடிகளாகிய அலைகளோடு கூடிய அந்தச் சேனா சமுத்திரமானது வாதாபிக் கோட்டையை மூழ்க அடிக்கும் நோக்கத்துடன் பொங்கி முன்னேறுவது போலக் காணப்பட்டது.

பல்லவ சைனியத்தின் யானைப்படை நாலு கோட்டை வாசல்களையும் நோக்கிச் சென்ற காட்சி, கருங்குன்றுகள் இடம் பெயர்ந்து செல்லும் காட்சியையொத்திருந்தது.

இந்தச் சந்தர்ப்பத்துக்காகவே வெகு நாளாகப் பயிற்சி பெற்றுக் காத்துக் கொண்டிருந்த பிரம்மாண்டமான யானைகள் துதிக் கைகளில் இரும்புலக்கைகளையும் வைரம் பாய்ந்த மரத் தூண்களையும் தூக்கிக் கொண்டு அசைந்து அசைந்து சென்ற போது பூமி அதிர்ந்தது; புழுதிப் படலங்கள் கிளம்பி வானத்தை மறைத்தன.

ஓர் இலட்சம் வீரர்களும் பத்தாயிரம் யானைகளும் சேர்ந்தாற் போல் இடம் பெயர்ந்து சென்றதனால் ஏற்பட்ட ஓசை, சண்ட மாருதம் அடிக்கும்போது மகா சமுத்திரத்தில் உண்டாகும் பெருங் கோஷத்தை ஒத்திருந்தது.

சற்று நேரம் வரையில் அவ்வளவு சைனியமும் இருட்டிலேயே இடம் பெயர்ந்து சென்றன. திடீரென்று இங்கொன்று அங்கொன்றாகத் தீவர்த்திகளும் தீப்பந்தங்களும் தோன்றலாயின. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவை பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம் என்ற கணக்கில் எரியத் தொடங்கின. அந்தத் தீவர்த்திகளிலும் தீப்பந்தங்களிலும் எழுந்த புகை, நாற்புறமும் பரவிச் சூழ்ந்து ஒரு பயங்கரமான மாயலோகக் காட்சியை அளித்தது.

சேனாதிபதி பரஞ்சோதி தமது கூடாரத்துக்கு வெளியில் நாற்புறமும் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் அமைதியின்றி அங்கு மிங்கும் நடந்ததையும், கத்தியினால் பூமியைக் கீறிக் கோலம் போட்டதையும் பார்த்தால் அவர் யாரையோ, எதையோ எதிர் பார்த்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. அப்போது சடையனும் இன்னும் நாலு பேரும் வாதாபிக் கோட்டை வாசலிலிருந்த கணபதியைத் தூக்கிக் கொண்டு வந்து சேர்ந்தார்கள். விக்கிரகத்தைக் கூடாரத்துக்குள் கொண்டுபோய் வைக்கும்படி பரஞ்சோதி கட்டளை இட்டார். அவர்கள் பின்னால் பரஞ்சோதியும் உள்ளே சென்று சடையனைப் பார்த்து, "அப்பனே! நீயும்

அமரர் **கல்கி**

உன்னுடைய ஆட்களும் இங்கேயே இருந்து இந்தக் கணபதிராயனைப் பத்திரமாய்ப் பாதுகாக்கவேணும். என்னுடைய மனோரதம் நிறைவேறினால், சிவகாமி தேவிக்கு எவ்விதத் தீங்கும் நேரிடாமல் வாதாபிக் கோட்டைக்குள்ளேயிருந்து பத்திரமாகக் கொண்டு சேர்த்தேனேயானால், இந்த விநாயகப் பெருமானை என் கிராமத்துக்குக் கொண்டு போய்க் கோவில் கட்டி வைத்துத் தினம் மூன்று வேளை பூஜை செய்விப்பதாக வேண்டுதல் செய்து கொண்டிருக்கிறேன்!'' என்றார்.

மீண்டும் அவர், ''சடையப்பா! இங்கே இருந்து நீங்கள் இந்த விக்கிரகத்தைக் காத்துக் கொண்டிருப்பதனால் வாதாபிக் கொள்ளையில் உங்களுக்குப் பங்கு இல்லாமல் போய்விடும். அதற்கு நான் ஈடு செய்து கொடுக்கிறேன்!'' என்றார்.

''சுவாமி! ஆக்ஞை எப்படியோ அப்படியே நடந்து கொள்ளுகிறோம்!'' என்றான் சடையப்பன்.

சேனாதிபதி பரஞ்சோதி, பின்னர் கணபதியின் விக்கிரகத்தை நோக்கிக் கைகூப்பிக் கொண்டு கண்களை மூடிய வண்ணம் சிறிது நேரம் பிரார்த்தனை செய்தார்.

அதே சமயத்தில் வெளியில் யாரோ ஓடிவரும் சத்தம் கேட்டது. அடுத்த கணம் சத்ருக்னன் தலைவிரிகோலமாய் உள்ளே ஓடிவந்தான். அவனுடைய முகம் பேயடித்தவன் முகம் போல் இருந்தது.

பரஞ்சோதி அவனைத் திரும்பிப் பார்த்து, ''சத்ருக்னா! இது என்ன கோலம்? ஏன் இப்படிப் பீதி கொண்டவனைப்போல் இருக்கிறாய்? ஏதாவது பெரிய ஆபத்து நேர்ந்ததா? போன காரியத்தில் வெற்றி கிடைக்கவில்லையா?'' என்று கேட்டார்.

''சேனாதிபதி! என் வாழ்க்கையில் எத்தனையோ பயங்கரமான ஆபத்துக்களில் சிக்கிக் கொண்டிருக்கிறேன். ஆனால், நேற்றும் இன்றும் எனக்கு ஏற்பட்ட ஆபத்தைப் போல் இதுவரையில் ஏற்பட்டதில்லை'' என்று சொல்லிவிட்டுப் பக்கத்தில் நின்றவர்களைப் பார்த்தான்.

அந்தக் குறிப்பை உடனே உணர்ந்து சேனாதிபதி அவர்களை வெளியில் போகச் சொன்னார். அவர்கள் போனவுடன் சத்ருக்னனைப் பார்த்து, ''சத்ருக்னா! கோட்டையைத் தாக்க ஆரம்பித்தாகிவிட்டது. சிறிதும் தாமதிக்க நேரமில்லை. உன்னுடைய கதையைச் சுருக்கமாகச் சொல்லிமுடி! போன காரியத்தில் வெற்றி அடைந்தாயா, இல்லையா? அதை முதலில் சொல்!'' என்றார்.

''சேனாதிபதி! கோட்டைக்குள் போக இரகசியச் சுரங்க வழி இருக்கிறது. அது இருக்கும் இடத்தையும் கண்டுபிடித்து விட்டேன். ஆனால், அதன் வழியாகக் கோட்டைக்குள் போவது சுலபமான காரியமில்லை. கோட்டைத் தாக்குதலோ ஆரம்பமாகி விட்டது. இனிச் சுரங்க வழியில் போய்த்தான் என்ன பிரயோஜனம்? எல்லாவற்றிற்கும் தங்களிடம் யோசனை கேட்டுக் கொண்டு போக வந்தேன்!'' என்று சொல்லிப் பிறகு, தான் வந்த வரலாற்றைக் கூறினான்.

# முப்பத்தெட்டாம் அத்தியாயம்

# பயங்கரக் குகை

சேனாதிபதி பரஞ்சோதியிடம் ஒற்றர் தலைவன் சத்ருக்னன் என்றுமில்லாத பதைபதைப்போடு கூறிய வரலாறு வருமாறு :

சேனாதிபதியும், சக்கரவர்த்தியும் கட்டளையிட்டபடி சத்ருக்னனும் குண்டோதரனும் நகரத்துக்குள் போவதற்கு இரகசியச் சுரங்க வழி இருக்கிறதா என்று கோட்டையைச் சுற்றியுள்ள பிரதேசங்களில் தேட ஆரம்பித்தார்கள். காபாலிகர்களின் பலிபீடத்துக்கு அருகிலுள்ள மேடும் பள்ளமுமான பாறைகளிலேதான் சுரங்க வழி இருந்தால் இருக்கவேணுமென்று அந்தப் பாறைகளிலேயெல்லாம் நுணுக்கமாகத் தேடிக் கொண்டிருந்தார்கள். அப்படித் தேடி வரும் போது ஒருநாள் இரவில் ஏதோ தீ எரிவதைப் பார்த்து அதன் அருகே சென்றார்கள். தீயின் அருகில் ஒரு மனிதனும் ஸ்திரீயும் காணப்பட்டனர். அந்த மனிதன் நாகநந்தி பிக்ஷு என்று தெரிந்தது. ஸ்திரீயோ பயங்கரத் தோற்றங் கொண்ட காபாலிகை. அவர்களுடைய சம்பாஷணையை மறைந்திருந்து ஒற்றுக் கேட்டதில் விளக்கமாக ஒன்றும் தெரியவில்லை. ஆனால், புலிகேசி, சிவகாமி என்ற பெயர்கள் அடிக்கடி கேட்டன. காபாலிகையைத் தமக்காக ஏதோ ஒத்தாசை செய்யும்படி நாகநந்தி கேட்டுக் கொண்டிருந்ததாக மட்டும் தெரிந்தது. பொழுது விடியும் சமயத்தில் பிக்ஷுவும் காபாலிகையும் ஒரு குகையை மூடியிருந்த



பாறையை உருட்டித் தள்ளிவிட்டுக் குகைக்குள்ளே போனார்கள். அவர்கள் உள்ளே போனதும் குகைத் துவாரம் மறுபடியும் மூடப்பட்டது.

சத்ருக்னனும் குண்டோதரனும் வெகு நேரம் காத்திருந்து பார்த்த பிறகு அந்தப் பாறையைத் தாங்களும் பெயர்த்துத் தள்ளிவிட்டுக் குகைக்குள்ளே போகலாமென்று எண்ணினார்கள். அதே சமயத்தில் உட்புறமிருந்து பாறை அசைக்கப்பட்டதைக் கண்டு நல்லவேளையாக ஓடி ஒளிந்து கொண்டார்கள். காபாலிகை மட்டும் வெளியில் வந்தாள். அவள் குகை வாசலைவிட்டு அப்பால் போகும் சமயத்தில் குகைக்குள்ளே போய்ப் பார்க்கலாம் என்று காத்திருந்தார்கள். பகலெல்லாம் அவள் குகைத் துவாரத்தை விட்டு அசையவில்லை. சாயங்கால வேளையில் அவள் கொஞ்சம் அப்பால்போன சமயம், குண்டோதரனை வெளியில் நிறுத்திவிட்டுச் சத்ருக்னன் மட்டும் குகைக்குள் நுழைந்தான். அப்பா! அந்தக் குகையின் பயங்கரத்தை நினைத்தால் இனிமேல் வாழ்நாள் முழுதும் இரவில் தூக்கமே வராது. அப்படி மனிதரின் மண்டை ஓடுகளும் எலும்புகளும் அங்கே குவிந்து கிடந்தன. நாற்றமோ சகிக்க முடியவில்லை. குகைக்குள்ளே ஒரே இருட்டாகவிருந்த படியால் அதற்குள் கரங்க வழி இருக்கிறதா என்பதைக் கண்டு பிடிக்க முடியவில்லை. திடீரென்று கொஞ்சம் தெரிந்த வெளிச்சமும் மறைந்துவிட்டது. சத்ருக்னன் தான் நுழைந்து வந்த துவாரம்

எங்கே என்று பார்த்தான். துவாரம் இருந்த இடம் தெரியவில்லை. காபாலிகை வெளியில் இருந்தபடியே குகைத் துவாரத்தை அடைத்துவிட்டாள் என்று ஊகித்ததும் அவன் அடைந்த திகிலைச் சொல்லமுடியாது. கபாலங்களும் எலும்புகளும் கும்மிருட்டும் துர்நாற்றமும் நிறைந்த அந்தப் பயங்கரக் குகைக்குள்ளே அவன் எத்தனை நேரம் கழித்தானோ தெரியாது. எவ்வளவோ முயற்சி செய்தும் துவாரம் இருந்த இடத்தையே அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை.

நாலு யுகங்கள் என்று தோன்றிய காலம் அவன் அந்த இருண்ட குகைக்குள்ளே அங்குமிங்கும் பயனின்றி அலைந்து உழன்ற பிறகு திடீரென்று சிறிது வெளிச்சம் ஒரு பக்கத்தில் காணப்பட்டது. குகையின் துவாரம் திறந்தது. காபாலிகை உடனே உள்ளே நுழைந்தாள். அவள் கையில் ஒரு மனிதக் கபாலமும் எலும்புகளும் கொண்டு வந்தாள். சத்ருக்னன் குகையின் ஒரு கோடியில் சென்று பாறைச் சுவரோடு ஒட்டிக் கொண்டு நின்றான். காபாலிகை கையில் கொண்டுவந்த கபாலத்தையும் எலும்புகளையும் ஓரிடத்தில் தனியாகப் பத்திரப் படுத்தி வைத்த பிறகு குகையின் மத்தியில் தரையில் உட்கார்ந்து ஒரு பெரிய பாறாங் கல்லைப் பெயர்த்தாள். பெயர்த்த இடத்தில் அவள் இறங்கியபோது, அதுதான் சுரங்க வழியாயிருக்க வேண்டும் என்று சத்ருக்னன் ஊகித்துக் கொண்டான். இத்தனை நேரம் அந்தப் பயங்கரக் குகையில் ஆகாரம் தண்ணீர் இன்றிக் காத்திருந்தது வீண் போக வில்லை என்று எண்ணிச் சந்தோஷப் பட்டான். சுரங்கத்தில் இறங்கிய காபாலிகை தன் மனத்தை மாற்றிக் கொண்டாள் என்று தோன்றியது. மறுபடியும் மேலே ஏறினாள். திறந்த சுரங்கவாயை மறுபடியும் மூடிவிட்டு அதன்மேல் படுத்துத் தனக்குத் தானே பேசிக் கொண்டிருந்தாள். அவளுடைய பேச்சிலிருந்து சில முக்கிய விஷயங்கள் தெரியவந்தன. அவள் நாகநந்தி என்கிற புத்த பிக்ஷுவை காதலித்தாள் என்றும், அதன் காரணமாகச் சிவகாமியைத் துவேஷித்தாள் என்றும், புலிகேசி இறந்து விட்டான் என்றும், அவனுடைய எலும்பையும் கபாலத்தையும் தான் அவள் சற்றுமுன் குகைக்குள் கொண்டு வந்தாள் என்றும், நாகநந்தி பிக்ஷு புலிகேசியைப் போல் வேஷம் போட்டு நடித்து வாதாபிச் சக்கரவர்த்தியாகி, சிவகாமியைச் சக்கரவர்த்தினியாக்க விரும்புகிறார் என்றும் அதைத் தடுக்க இந்தக் காபாலிகை கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறாள் என்றும் தெரிந்தது. வெகு நேரம் இப்படி அவள் தனக்குத்தானே பிதற்றிக் கொண்டிருந்த பிறகு மௌனமானாள். அவள் தூங்குகிறாள் என்று எண்ணிய சத்ருக்னன் அந்தச் சமயத்தில் தப்பி வெளியேறத் தீர்மானித்தான். திறந்திருந்த குகைத் துவாரத்தை நோக்கி மெள்ள மெள்ள அடிவைத்து நடந்தான். துவாரத்துக் கருகில் வந்ததும் விரைவாக அதில் நுழைந்து வெளியில் குதித்தான். குதித்த அதே சமயத்தில் அவனுடைய ஒரு கையைக் குகைக்குள்ளேயிருந்து யாரோ பற்றினார்கள். சத்ருக்னன் திடுக்கிட்டுப் பார்த்தான். காபாலிகை குகையின் உட்புறத்தில் நின்றபடி அவனுடைய ஒரு கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு பயங்கரமாக உறுமினாள். சத்ருக்னனுடைய சப்த நாடியும் ஒடுங்கிவிட்டது. 'செத்தோம்' என்று எண்ணிக் கொண்டான். ஆயினும் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளக் கடைசி முயற்சியாகக் கையைத் திமிறினான். எனினும், காபாலிகையின் இரும்புப் பிடியிலிருந்து அவனால் விடுவித்துக் கொள்ள முடியவில்லை.

காபாலிகை அப்போது, ''லம்போதரா! லம்போதரா'' என்று கூவினாள். ''இதோ வந்துவிட்டேன், தாயே!'' என்று குண்டோதரன் பக்கத்துப் பாறை மறைவிலிருந்து ஓடிவந்ததைப் பார்த்ததும் சத்ருக்னனுக்கு வியப்பினால் வாய் அடைத்துப் போயிற்று. சத்ருக்னனைப் பார்த்துக் குண்டோதரன் கண்களினால் சமிக்ஞை செய்து கொண்டே அவனருகில் ஓடிவந்தான். குகையின் உள்ளே நின்ற காபாலிகை, ''லம்போதரா! இந்தத் திருட்டு ஒற்றனைச் சற்றே பிடித்துக்

## அருள்வாக்கு

நாம் எல்லோரும் ஸ்வயஞ்ஜ்யோதியான ஆத்மாதான் என்றாலும் அது நமக்கே தெரியாதபடி கர்மா மேகமாக மறைக்கிறது. கர்மா மூடிய ஜீவனை அதிலிருந்து வெளியிலே கொண்டு வர வேண்டிய பொறுப்பு நமக்கு இருக்கிறது. நம்மை லோகத்தில் வெறுமனே தனியாக விட்டு வைத்திருக்கவில்லை. பெண்டாட்டி, பிள்ளை குட்டி என்று சேர்த்து வைத்திருக்கிறது. இதுவும் கர்மாவால் ஏற்பட்டதுதான். கர்மவாஸனை ஒரு பக்கம் நம் மனஸுக்குள் அழுக்குகளை ஏற்றி ஆத்மாவை உணர முடியாமல் பண்ணுகிறதென்றால், கர்ம பந்தம் பல உறவுகளாக வந்து ஒரு வீட்டிலே கட்டிப் போட்டுக் கடமைகளைப் பண்ண வைக்கிறது. உடம்பு என்ற வீட்டுக்குள் இருக்கும் ஜீவன், அப்புறம் அந்த ஜீவனுக்கு

> பந்துக்கள் என்பவர்களால் ஏற்பட்டிருக்கும் விடு இவற்றுக்கு ஒருத்தன் பண்ண வேண்டிய கடமைகளைப் பண்ணினாலன்றி கர்மாவைத் தீர்க்க முடியாது. இத்தனை பழைய கர்மா பாக்கியை வைத்துக் கொண்டு இப்போதே ஆத்மா தெரியணும், ஈச்வரன் தெரியணும் என்றால் தெரியாது. ஸத்கர்மாவால் பாபகர்மாவைப் போக்கிக் கொண்ட பின்தான் மேகம் விலகி ஸூர்யப் பிரகாசம் தெரியும். இந்த ஸத்கர்மா பலவிதமான கடமைகள் ரூபத்தில் இருக்கிறது. ஆத்ம ஞானம் அல்லது ஈச்வர பக்தி என்று ஒரே ஆவேசமாகப் போகிற அபூர்வமான சில பேர்களுக்குத்தான் ஒரே flashல் கர்மா அறுந்து விழுமே தவிர, மெஜாரிடி ஜனங்களுக்கு ட்யூட்டிகளை சுத்தமாகப் பண்ணிப் பண்ணி ரொம்பவும் gradual ஆகத்தான் கர்மாவைப் போக்கிக் கொள்ள முடியும்.
>
> 
>
> - ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

கொள். கத்தியை எடுத்துக் கொண்டு வருகிறேன். விட்டு விடமாட்டாயே?'' என்றாள். ''ஒருநாளும் விடமாட்டேன். அம்மா! இவனை முதல் பலி நானே கொடுக்கப் போகிறேன்!'' என்று சொல்லிச் சத்ருக்னனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான் குண்டோதரன். காபாலிகை உள்ளே சென்றாள். உடனே குண்டோதரன் சத்ருக்னனுக்குச் சமிக்ஞை காட்டிப் பிடியையும் தளர்த்த, சத்ருக்னன் தன்னை விடுவித்துக் கொண்டு ஓடினான். குண்டோதரன் பெருங் கூச்சல் போட்ட வண்ணம் அவனைத் துரத்திக் கொண்டு ஓடினான். கொஞ்ச தூரத்தில் ஒரு பாறை மறைவுக்கு வந்ததும் குண்டோதரன் நின்று, ''சுவாமி! உங்களுடைய கதி என்ன ஆயிற்று என்று தெரிந்து கொள்வதற்காக இந்தக் காபாலிகையின் சிஷ்யப்பிள்ளை ஆனேன். என்னைப்பற்றிக் கவலை வேண்டாம். நான் இங்கிருந்து இவளைச் சமாளித்துக் கொள்கிறேன். நீங்கள் சீக்கிரம் போங்கள். கோட்டைத் தாக்குதல் ஆரம்பமாகி விட்டதாகத் தோன்றுகிறது!'' என்றான்.

''குகைக்குள்ளே சுரங்க வழி இருக்கிறது. குண்டோதரா! நான் போய்ச் சேனாதிபதியிடம் சொல்லி ஆட்களுடன் வந்து சேருகிறேன். அதுவரை நீ இந்த ராட்சஸியை எப்படியாவது சமாளித்துக் கொண்டிரு. அவளைச் சுரங்க வழியில் போக விடாதே!'' என்று சத்ருக்னன் சொல்லி விட்டு ஓட்ட ஓட்டமாகச் சேனாதிபதியைத் தேடி ஓடி வந்தான். பிறகு குண்டோதரனுடைய கதி என்ன ஆயிற்று என்பது சத்ருக்னனுக்குத் தெரியாது.

மேற்கூறிய வியப்பும் பயங்கரமும் நிறைந்த வரலாற்றைக் கேட்டதும், சேனாதிபதி பரஞ்சோதி, ''சத்ருக்னா! ரொம்பவும் அவசரமான சமயத்தில் இப்படிப்பட்ட முக்கியச் செய்தியைக் கொண்டுவந்திருக்கிறாய். நன்றாய் யோசிப்பதற்குக் கூட நேரம் இல்லை. கோட்டைத் தாக்குதலோ ஆரம்பமாகிவிட்டது. நாளைப் பொழுது விடிவதற்குள் கோட்டைக்குள் பிரவேசித்து விடுவோம். எல்லாவற்றுக்கும் நீ நூறு வீரர்களுடன் அந்தக் காபாலிகையின் குகை வாசலுக்குப்போ! சுரங்க வழி மூலமாக யாரும் வெளியில் தப்பித்துக் கொண்டு போகாமல் பார்த்துக் கொள். முடிந்தால் நீயும் குண்டோதரனும் சுரங்க வழியாகக் கோட்டைக்குள்ளே வந்து சேருங்கள். கோட்டை வாசல் திறந்ததும் நான் நேரே சிவகாமி தேவியின் வீட்டிற்குச் செல்கிறேன். கணேசரின் கருணை இருந்தால் சிவகாமி தேவியைக் காப்பாற்றி ஆயனரிடம் ஒப்புவிக்கும் பாக்கியம் நமக்குக் கிடைக்கும்'' என்று கவலையோடு கூறினார்.

(தொடரும்)

# ஒருபார்ப்ப

"ஏங்க... இன்னும் அவங்க நம்ம பின்னாடியே வர்றாங்க?'' என்றாள் யமுனா, தன்னுடைய தோளை வளைத்து அணைத்திருந்த கணேஷிடம். இருவரும் தேனிலவுத் தம்பதிகள்.

கணேஷ் திரும்பிப் பார்த்தான். ஒரே மாதிரியான ஸ்டோன்வாஷ் பேண்ட்டும், டி ஷர்ட்டும் அணிந்து, வாயில் சிகரெட்டுடன் சொற்ப இடைவெளி விட்டு அந்த நான்கு பேர்.

கணேஷும், யமுனாவும் பொடானிகல் கார்டனுக்குள் நுழைந்ததிலிருந்து எங்கு போனாலும் விடாமல் வந்து கொண்டேயிருந்தார்கள். அட்டகாசமான சிரிப்பும், அருவருப்பான பேச்சும்...

"கொஞ்ச நேரம் எங்கேயாவது உட்காரலாங்க. அவங்க போகட்டும்...''

புல்வெளியின் 'மெத்'தில் ஓர் ஓரமாய் ஒரு மரத்தின் கீழே உட்கார்ந்தார்கள்.

"பசிக்குது... ஸ்நேக்ஸ் என்ன இருக்கு?''

யமுனா ஹேண்ட் பேக்கிலிருந்து 'கேக்'கை எடுத்தாள்.

"நீ பாதி சாப்டுக் கொடு யமு!''

"பேசாம சாப்டுங்க. பொது இடத்தில வந்து...'' என்று பிகு செய்து கொண்டே யமுனா வெட்கத்தோடு ஒரு விள்ளலைக் கடித்து விட்டு நீட்டினாள். கணேஷ் வாயைத் திறந்து காட்டினான்.

"ச்சு... கையில வாங்கிக்குங்க.''

'முடியாது' என்பது போலத் தலையாட்டினான். அவள் ஊட்டி விட்டாள்.

"அடடா... 'கேக்'கை நாம சாப்பிட்டா எவ்வளவு நல்லாயிருக்கும்.''

அதே நான்கு பேர். சற்று தள்ளி அமர்ந்திருந்தார்கள்.

"பெரிய தொந்தரவாப் போச்சி... ஸ்கவுண்ட்ரல்ஸ்'' யமுனா முணுமுணுத்தாள்.

"நான் போய் என்ன, ஏதுன்னு கேட்டுட்டு வர்றேன் யமு.''

"வேண்டாங்க... வீணாத் தகராறு பண்ணிக்கிட்டு. நமக்குத்தான் அசிங்கம்.''

"சரி வா... வேற இடத்துக்குப் போகலாம்.''

கையைத் தட்டி விட்டுக் கொண்டு எழுந்து நடந்தார்கள்.

கிளாஸ் ஹவுஸ். உள்ளே வரிசையாய்ப் பலவித நிறத்தில் மலர்கள் பூந்தொட்டிகளில் அணிவகுத்திருந்தன.

"நிறம் மாறாத பூக்கள்ல ரதி அக்னிஹோத்ரி ஓடி வருவாளே... இந்த இடம் தான்...'' கணேஷ் சொல்லிக் கொண்டிருக்க -

"சில பேர் அதே மாதிரி ஓடி வந்தா இலவசமா ஷூட்டிங் பார்க்கலாம். இல்லையாடா?''

அவர்கள் வந்து விட்டார்கள்.

"யமு, கொஞ்சம் இரு, வர்றேன்!''

"வேண்டாம்... விடுங்க. வெளியே போயிடலாம்'' என்றாள் யமுனா. வெளியே வந்தார்கள்.

"உன்னாலதான் கம்முனு விட்டுட்டேன். இல்லேன்னா ரெண்டுல ஒண்ணு பார்த்திருப்பேன்!'' சொல்லியவாறே கணேஷ் மீண்டும் யமுனாவின் தோளை அணைத்துக் கொண்டான்.

கல்லாகிப் போன மரம். ரோஸ் கார்டன், புல்லில் வடிவமைத்த பகமையான தஞ்சைக் கோவில் என வரிசையாய்ப் பார்த்து ரசித்தார்கள்.

"எக்ஸ்கியூஸ் மீ!''

கணேஷ் திரும்பினான். பின்னால் மற்றொரு இளஞ்ஜோடி.

"உங்களுக்கு ஆட்சேபணை இல்லைன்னா ஒரு சின்ன உதவி பண்ணணும். நாங்க ரெண்டு பேரும் இங்க நிக்கறோம். 'ஸ்நாப்' ஒண்ணு எடுக்கணும்...'' என்றான் அந்த இளைஞன்.

"நோ ப்ராப்ளம்!'' என்ற கணேஷ் கேமராவை வாங்கிக் கொண்டான்.

"ஃபுல் சைஸ்'' என்று சொல்லி விட்டு இளைஞன் தன் மனைவியின் இடுப்பை

உதாதிபன்



''எனக்கு ரொம்ப நாளா ஒரு ஆசை. சாகறதுக்குள்ளே எப்படியாவது ஒரு தடவை தாஜ்-மஹாலைப் பார்த்துட்டு வரணும்னு...!''

''ஏன், போக வேண்டியதுதானே? இப்பதான் நல்ல வசதியா இருக்கீங்களே - அப்புறம் ஏன் யோசனை?''

''போய்ட்டு வந்துட்டா... அப்புறம் எங்கே செத்துப் போயிடுவமோன்னு பயமா இருக்கு!''

- பெ. கலாசாமி

வளைத்துத் தோளில் முகம் சாய்த்து 'போஸ்' கொடுத்தான்.

''ஸ்மைல்... ஒன்...டூ...த்ரீ...!''

க்ளிக்!

''நாமும் போட்டோ எடுத்துக்கலா மாடா?''

''எடுத்துக்கலாம். பக்கத்தில நிக்க துணை யாரும் இல்லையே...''

''இதில யாராவது ஒருத்தரைக் கேட்டா ஒத்துக்க மாட்டேன்னா சொல்லப் போறாங்க!''

மறுபடியும் வம்புக் கும்பல்!

அதைக் கேட்டு இளைஞனின் முகம் கோபத்தில் சிவந்தது. வேகமாக அவர்களை நோக்கிச் சென்றான். அவன் மனைவி ஓடி வந்து கையைப் பற்றித் தடுத்தாள்.

''வேண்டாங்க...!''

''நோ... இந்த மாதிரி ஆளுங்களையெல்லாம் சும்மா விடக் கூடாது...''

''ப்ளீஸ்...!'' மனைவி மறுப்பதைப் பொருட்படுத்தாமல் கையை உதறி விட்டு நால்வரையும் நெருங்கி, ''என்ன மிஸ்டர் நினைச்சிக்கிட்டிருக்கீங்க... உடம்பு எப்படியிருக்கு?'' என்றான் கோபமான குரலில்.

''நாங்க பாட்டுக்கு வேற யாரைப் பத்தியோ பேசிக்கிட்டிருக்கோம். உங்களுக்கேன் கோபம் வருது...?'' என்று வீறாப்பாய்ப் பேசினவனின் சட்டையைக் கொத்தாய்ப் பற்றினான் இளைஞன்.

'சட்'டென்று அவர்களின் முகத்தில் பய ரேகை படர்ந்தது. தண்ணீர் பட்ட நெருப்பாய்த் தணிந்தார்கள்.

''சார்... ஏதோ ஜாலியா தமாஷ் பண்ணினோம். இதைப் போய் பெரிசா எடுத்துக்இட்டு... வேணும்னா மன்னிப்புக் கேட்டுக்கறோம் சார்....'' என்றார்கள். இப்பொழுது குரலின் தொனியே மாறி இருந்தது.

''இன்னொரு தடவை இது மாதிரி நடந்துக்கிட்டீங்க... அப்புறம் என் கை தான் பேசும்... கெட் லாஸ்ட்!''

மறு பேச்சின்றி அமைதியாக அகன்றார்கள்.

இளைஞன் அலட்சியமாக வந்து, கணேஷிடமிருந்து கேமராவை வாங்கிக் கொண்டு, ''தேங்க்யூ வெரி மச்! ஸீயு....'' என்று புன்னகையுடன் சொல்லி விட்டுத் தனது மனைவி யருகே சென்றான்.

''வெல்டன்! நீங்க போட்ட போடுல பயந்து கப்சிப்னு போயிட்டாங்களே...?'' என அவள் அவன் கையைப் பற்றிக் கொண்டாள். முகத்தில் பெருமிதம் வழிந்தது.

''லெட்ஸ் கோ!''

எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்த கணேஷ், ''முதல்ல போகாதீங்கன்னு தடுத்த அதே பொண்ணு இப்ப பாராட்டுறாளே!'' என்றான் ஆச்சரியமாய்.

''வெளிப்படையாத் தடுத்தாலும் உள்ளூர கணவரோட தைரியத்தையும், கம்பீரமான செய்கையையும் பார்த்து ரசிக்கணுங்கிற எதிர்பார்ப்பு இருந்திருக்கும் அந்தப் பொண்ணு மனசில!'' என்றாள் யமுனா.

''உனக்கெப்படித் தெரியும்?''

''எனக்குள்ளேயும் அப்படிப்பட்ட எதிர்பார்ப்பு இருக்குங்க...'' இதை யமுனா வெளியே சொல்லவில்லை!

●● பழம் பெரும் ஹரிகதா காலட்சேப வித்வான்களால் செய்து வரப்பட்ட நூற்றுக்கணக்கான பிராசீன, சம்பிரதாய ஹரி கதை நிருபணங்களைச் சேகரித்து வைத்துள்ளோம். எங்கள் வித்யாலயத்தில் பயிலும் மாணவ மாணவியருக்குப் போதிக்கிறோம். ஆர்வமுள்ளவர்கள் எழுதினால் நிருபணங்களை இலவசமாகக் கொடுத்து, இந்தக் கலை வளர்ச்சி அடைய உதவத் தீர்மானித்துள்ளோம்.

– ஆர். பாலமுருகதாஸ்,
ஸ்ரீ லலிதா சங்கீத வித்யாலயம்,
16, சிவராயர் தோட்டம்,
கீழ ராஜ வீதி,
மானம்புச்சாவடி, தஞ்சை – 613 001.

●● தினமணி முன்னாள் ஆசிரியர் ஏ.என். சிவராமன் எழுதி, தினமணி நிறுவனம் வெளியிட்ட மலிவு விலைப் புத்தகங்கள் யாரிடமேனும் இருந்தால் எனக்கு அனுப்பி உதவிட வேண்டுகிறேன்.

– பி.ஆர். விஸ்வநாதன்,
23, கோவிந்த் தெரு,
சென்னை – 600 017.

●● தமிழகத்தில் உள்ள திருக்கோயில்கள் பற்றிய விவரங்கள் திரட்டி, கட்டுரைகளும் நூல்களும் எழுதி வருகிறேன். பழைய தல வரலாற்று நூல்கள், கும்பாபிஷேக மலர்கள் போன்றவை இருந்தால் விலைக்கு வாங்கிக் கொள்ளத் தயார்.

– ம. இராஜகோபாலன்,
A4, (ஆனந்த்) மைக்கோ காலனி,
சென்னை – 600 090.

●● திருச்சியில் ஒரு லட்சம் முதலீட்டில், நல்ல லாபம் தரத்தக்க கணக்குப் புத்தகங்கள் (account note books) தயாரிப்பு, மற்றும் விற்பனைத் தொழிலில் ஈடுபட விரும்புவோருடன் இணைந்து செயல்படத் தயார். 22 வருஷ அனுபவம்.

– டி. முத்துக்கருப்பன்,
22, தெற்கு இரட்டைப் பிள்ளையார் கோயில் தெரு,
பாலக்கரை, திருச்சி – 620 001.

●● போடி வட்டாரத்தில் சுயமாக fresh water fish farming தொடங்க முடிவு செய்துள்ளேன். தொழில் தொடர்பான அனைத்து விவரங்களும் தந்து உதவுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

– R.B. உத்தம்சிங்,
12/6, புன்னைவனம் பிள்ளை தெரு,
போடிநாயகனூர், மதுரை (மா.வ),

●● இரு அன்னப்பட்சிகள் தாமரைப்பூவுடன் இருக்கும் கதேசமித்திரன் நாளிதழின் சின்னம் தேவை. இந்தச் சின்னத்துடன் கூடிய ஏதாவது ஒரு ''மித்திரன்'' நாளிதழோ அல்லது அந்தச் சின்னம் மட்டும் கத்தரித்தோ அனுப்பி உதவவும்.

– சின்னஞ்சிறு கோபு,
பொறையார் ரோடு,
மங்கைநல்லூர் பஜார் – அஞ்சல்,
மயிலாடுதுறை – 609 404.

●● நல்ல முறையில் இயங்கிக் கொண்டிருக்கும் SLR பழைய காமிரா ஒன்று தேவை. ஃபிளாஷ் இருந்தால் நலம்.

– அ. சரவணகுமார்,
4/341, செந்தில்நாதன் தெரு,
தாசில்தார் நகர், மதுரை – 625 020.

●● மொசைக் தொழிலில் அனுபவ அறிவு உள்ள என்னை ஆலோசகராகக் கொண்டு, மொசைக் ஃபாக்டரி தொடங்க



## பாலம்

விருப்பம் உள்ளவர்கள் தொடர்பு கொள்க.

– B. குமரேசன்,
27 C, வைத்தீசுவரன் கோவில் தெரு,
காஞ்சிபுரம் – 631 501.

●● வயலின் கற்றுக் கொள்ள ஆசை. காரைக்குடி பகுதியைச் சுற்றி வயலின் கற்றுக் கொடுக்கும் ஆசிரியர்கள் இருப்பின் தயவு செய்து தெரிவிக்கவும்.

காவ்யா,
135, வெங்கடாசலம் செட்டியார் தெரு,
நா. புதூர், காரைக்குடி – 623 001.

---

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பேற்க இயலாது.)

15

# முற்றுகை

மேலாண்மை பொன்னுச்சாமி

இழவு வீடு கல்யாண வீடு போலக் களை கட்டி நின்றது. வாழ்ந்து முடித்த ஒரு கிழடின் சாவு. இயற்கையான சாவு. எவ்வித இழப்பும் இன்றி... முற்றிக் கனிந்து உலர்ந்து உதிர்கிற ஓர் இயல்பான சாவு. காயப்படுத்தாத சாவு.

வீட்டு முன்னால் ஒரு சின்னப் பந்தல். அவசரப் பந்தல். நாலு கம்புகளை ஊன்றி, மேலே ரெண்டு அகத்திக் குச்சிகளைக் குறுக்காகப் போட்டு... அதன் மேல் ரெண்டு தென்னங் கிடுகுகளை விரித்துப் போட்டு... ஆகிற்று ஒரு பந்தல்.

பந்தலின் அடிவயிற்றில் கட்டப்பட்ட வெள்ளைத் துணி. அதற்குள் பூ மாலைகள். இறுதிப் பயணத்திற்கான பூ மாலைகள்.

வீட்டின் எதிரே -

நிழல் உள்ள இடமெல்லாம் கிராமத்து ஜனங்கள். கலகலப்பாய் ஊர்க் கதைகள், நாட்டு நிலவரம் பேசிக் கொண்டு.

கதர்த் துண்டு போர்த்திய நாட்டாண்மை முன்னால் வெற்றிலைப் பெட்டி.

நாட்டாண்மை பக்கத்தில் கணக்கு நோட்டுடன் ஊர்க் கணக்குப் பிள்ளை. ஒவ்வொரு தலைக் கட்டும் ரெண்டு ரூபாய் தர வேண்டும். சமச் சடங்கிற்கான செலவுத் தொகை.

இறந்தவரின் இறுதிப் பயணச் செலவு ஊர்ச் செலவாக இருக்க வேண்டும் என்று ஒரு ஏற்பாடு. நாராயணசாமி நேராக அவரிடம் சென்றான்.

இரண்டு ரூபாய்த் தாளை நீட்டினான். வாங்கி மஞ்சள் பைக்குள் போட்டுக் கொண்ட கணக்குப் பிள்ளை, நோட்டை விரித்து.... நாராயணசாமி என்ற பெயருக்கு நேராக இரண்டு ரூபாயைக் குறித்துக் கொண்டு, 'டிக்' பண்ணிக் கொண்டான்.

அங்கு, பேச்சும் முரப்பட்டது. யாரும் துக்கப்பட்ட மாதிரியே தெரியவில்லை.

துக்கப்பட என்ன இருக்கிறது? சாக வேண்டிய வயசு வரை வாழ்ந்து செத்திருக்கிற பெரிசு.

எம்.ஜி.ஆர். மாதிரியே நடித்தும் ராமராஜன் படம் சரியாக ஓடாததற்கு என்ன காரணம் என்று காரசாரமாக விவாதம் நடந்தது. பேச்சு, தூள் பறந்தது.

உர விலையை இப்படி உயர்த்தி விட்டார்களே என்று ஒரு சம்சாரி புலம்பிக் கொண்டார்.

'' 'தலைவரை வெடிகுண்டு வைச்சுக் கொன்னு போட்டாங்களே, பாவிப் பயக' என்று மனசு எரக்கப்பட்டு, எதைப் பத்தியும் யோசிக்காம ஓட்டுப் போட்டோம். இப்ப என்னடான்னா, உர உப்பை மூட்டைக்கு அறுபது ரூவா, எழுவது ரூவான்னு வெலை ஏத்திட்டாங்க. இரும்பு விலை கூடுதல். பெட்ரோல் விலை கூடுதல். எண்ணெய் விலை கூடிப் போச்சு... சம்சாரிக எப்படித்தான் இந்தப் பூமியிலே வாழ்றதோ? தெரியலே!''

அவர் புலம்பலுக்குப் பதிலாக உள்ளடங்கிய நையாண்டியாக ஒருவரின் பதில். ''உருகி வழியுற மெழுகு வர்த்தியோட தலையிலே தீயைத்தானே வைப்பாக. பூவையா கொண்ணாந்து வைப்பாக?''

''அப்பவும்... இரக்கப்பட்டு உதவி செய்ஞ்ச அப்புராணிச் சம்சாரிக மூஞ்சியிலா... காறித் துப்புறது? இது தான், படிச்சவுக பண்பாடாக்கும்?''

''இது படிச்சவுக பண்பாடு இல்லே. நம்ம அரசியல் வாதிங்க பண்பாடு.''

நாராயணசாமி உட்கார்ந்த இடத்தில் மண்சுவர்தான் இருந்தது. சாய்ந்தால்... முதுகில் கல் கல்லாய் உறுத்துகிறது.

எழுந்து கிழக்கில் போய் உட்கார்ந்தான். அங்கு கொஞ்சம் வயதில் பெரியவர்கள். சட்டையில்லாத வெற்றுடம்பில் துண்டுகள் போட்டிருந்தனர்.

அங்கே நல்ல காரைச் சுவர். சிமெண்ட் பூசிய சுவர். வசதியாகச் சாய்ந்து கொண்டான். பாக்கை வாயில் போட்டுக் கொண்டான்.

இளவட்டங்கள் கூடை மண் வெட்டிகளோடு புறப்பட்டனர், குழி வெட்ட.

இன்னும் இருவர் பச்சை வாழைக் குச்சிகள் வெட்டக் கிளம்பினர். உறவினர்களுக்குத் 'தகவல்' சொல்ல மூலை மூலைக்கு இளவட்டங்கள் புறப்பட்டுப் போய் விட்டனர்.

இன்னும் கொஞ்சம் படித்தவனைப் பார்த்துத் தந்தி கொடுக்க அனுப்பி வைத்தனர். ரெண்டு பெரிய 'வாரி'களைக் கொண்டு வந்து போட்டனர், தேர் கட்ட. .

உள்ளூர் ஜவுளிக் கடையிலேயே ஒருவன் ஆறு மீட்டர் மல்லுத் துணி வாங்கி வந்து விட்டான். கலயம் வாங்கவும் ஆள் போயாகி விட்டது.

வீட்டுக்காரனை எதிர்பார்க்காமல் வேலைகள் தன் போக்கில் ரெக்கை கட்டிப் பறந்தன.

வெற்றிலையைப் போட்டு விட்டுத் துப்பினான் நாராயணசாமி. பீடியையும் பற்ற வைத்துக் கொண்டான்.

பெண்கள் இழவு வீட்டுக்குள் போய் வந்து கொண்டிருக்கின்றனர். இறந்த வேலய்யா தாத்தா ஒரு வேடிக்கையான ஆள். யாரையும் கோட்டி பண்ணிப் பேசுவதில் கெட்டிக்காரர். ரொம்ப உலக அனுபவம்.

காந்தி காலத்து விஷயங்களை ரொம்ப ருசியாகப் பேசுவார். சுபாஷ் சந்திரபோஸ் பற்றி என்றால் ரொம்ப சுடுபாடாகப் பேசுவார். தெரிந்த கதைகள், அறிந்த கதைகள் இவற்றுடன் சொந்தக் கதைகளையும் சேர்த்து விடுவார்.

டீக் கடையில் உட்கார்ந்து இப்படிப் பழைய கதைகளை அள்ளி விடுகிற போது... சில இளவட்டங்கள் நக்கலாய்க் கிண்டல் பண்ணுவார்கள்.

''தாத்தா இருக்குறது தெரியாமப் போச்சு. தெரிஞ்சிருந்தா... சாக்கு எடுத்துக்கிட்டு வந்துருப்பேன்.''





"நல்ல நேரத்தில் நம்ம தலைவர் தலை விட்டதால்தான் முத லாளி 30 நாள் போனஸ் தர ஒத்துக்கிட்டார்!"

"ஆம்... கேள்விப் பட்டேன்! இல் லேன்னா 50 நாள் தர் றதா இருந்தாராம்!"

- எஸ். ரமேஷ்

"ஏன்... வீட்லே தாட்டு இல்லியா?"

"தாட்டு இல்லே. சாக்கு எடுத்துட்டு வந்துருக்கா... தாத்தா புளுகுற புளுகு களையெல்லாம் கூட்டி அள்ளிட்டுப் போகலாமே."

இதெல்லாம் தாத்தாவுக்கு எறும்பு கடித்த மாதிரி. கண்டுகொள்ளவே மாட்டார்.

ஓர் அலட்சியச் சிரிப்பு சிரிப்பார். அவ்வளவுதான்!

**நா**ராயணசாமி கல்யாணம் முடிந்திருந்த சமயம். புது மாப்பிள்ளை முறுக்கில் 'தாம், தூம்' என்று அலைந்து கொண்டிருந்த நேரம்.

இவனை ஓயாமல் கேலி பண்ணுவார். வாய் வலிக்காமல் சிரிப்பார். பெரிய பணக்காரர் ராமானுஜ வீட்டில் 'சம்பந்தம்' கிடைத்த குருட்டாம்போக்கான அதிருஷ்டத்தைச் சொல்லிச் சொல்லிக் கேலி செய்வார்.

"குருட்டுப் பூனை விட்டத்துலே பாய்ஞ்சதுங்கிற கதை ஒனக்குத்தாண்டா பொருத்தம்" என்பார்.

அதற்கும் விளக்கம் சொல்வார்.

"குப்பைக் காட்டுலே கிண்டி மேயுற கோழி கோபுரத்துலே ஏறுறதுக்கு நெனைச்சாவது பாக்குமா? அப்படித்தான் நீயும். ஆனா, யார் செஞ்ச புண்ணியமோ... கோழிக்குக் கோபுர உச்சியிலே கூடு கிடைச்ச மாதிரி... ஒனக்கு அந்த வீட்லே சம்பந்தம் கிடைச்சிருக்கு."

அவர் சொல்லுகிற சொலவடைகளும் சரி, உவமைகளும் சரி ரொம்பப் புதுசாக இருக்கும். பொருத்தமாகவும் இருக்கும்.

அன்றைக்கும் அப்படித்தான். ஊர் மடத்தில் ஏராளமாய் ஆட்கள். வேலை குறைவான காலம். கூடியிருந்த ஜனங்கள் சம்சாரித்தனமே மதிப்புக் குறைந்து போனதைச் சொல்லிப் புலம்பிக் கொண்டிருந்தனர்.

"மானாவாரிக் காட்டுலே கெணத்தை நம்பிப் பாடுபடறதுலே இனிமே அர்த்தமே யில்லே. நெலத்தை நம்பி வேர்வை சிந்துனா... பத்திரமா வாழலாம்ங்கிறது பழைய கதை. இப்ப, சம்சாரித் தொழிலை விட்டுட்டு வேற தொழில் பாக்குறவ னெல்லாம் நல்லாயிருக்கான். சம்சாரி மட்டும் தான் சாவடை செத்துக் கெடக்கான்."

"நீரு சொல்லுறது நூத்துலொரு வார்த்தை. பெரிய சம்சாரிங்கிறவன் பெரிய கடனாளியாத்தானே இருக்கான்? ஆனா, ஓட்டைச் சைக்கிள்லே ஊரைச் சுத்திக்கிட்டு கொத்தைப் பருத்தி ஏவாரம் பாக்குறவன் கூட வட்டிக் கொடை வாங்கல் பண்ணிக்கிட்டு 'கெத்தா' திரியுதான்."

"இனிமே... நம்ம தோட்டங்கள்லே வேலி விதைகளை விதைக்கப் போட்டுட்டு, நாமளும் ஏதாச்சும் ஏவாரத்துக்குத்தான் போகணும். வெள்ளாமையும் பாக்க வேண்டாம், வெளக்கமாத்து அடியும் வேண்டாம். போதும் சனியன்!"

"எல்லாரும் ஏவாரத்துலே பாஞ்சுட்டா... வாங்குறது யாரு? குடுக்குறது யாரு?"

என்று திடும்மென்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டான்.

"அட... அப்படி ஒரு சங்கதி இருக்கோ... ச்சே! நெலம்ங்கிறது இப்ப கால்லே போட்ட விலங்கு. வாழவும் விட மாட்டேங்குது. ஓடவும் விட மாட்டேங்குது."

**நா**ராயணசாமிக்கு அவர்கள் பேசிக்கொண்ட விஷயமெல்லாம் நியாயமாகவே பட்டது. உண்மையும் அதுதான். ஆனால் ஒத்துக் கொள்ள மனசில்லை.

அவன் மனதில் நிலம் பற்றிய வெறுப்பு இல்லை. கனவுகள் இருக்கின்றன. இன்னும் இன்னும் என்று பூக்கின்றன. பூத்துச் சொரிகின்றன.

சொந்தமாய் பம்ப் செட் கிணறு. பங்கோ பகிர்வோ இல்லாமல் எல்லாமே தனக்கு என்று பம்ப் செட் கிணறு. வற்றாத தண்ணீர் உள்ள கிணறு.

"நம்ம நிதி அமைச்சர் திரும்பவும் எதுக்கு உலக வங்கிகிட்ட போனார்?"

"தீபாவளி இனாம் கேட்கத்தான்!"

- பரணி



ஆடிப் பட்டத்தில் விதைக்க அந்த ஏக்கர் கரிசல் காடு. புரட்டாசிப் பட்டத்தில் விதைப்புச் செய்யக் கரிசல் காடு. அரண் மனை மாதிரியான காரை வீடு.

எல்லாம் வேணும். அதற்குச் சொர்ணம் சம்மதிக்கணும். கிருஷ்ணம்மாவுக்குச் சக்க ளத்தியாகச் சம்மதிக்கணும்.

சின்னச் சம்சாரியாயிருப்பதில் சொல்ல முடியாத சீரழிவுகள். எண்ண முடியாத அவமானம். உப்புக் கல்லுக்குப் பெறாத ஒரு பயல் கூட மதிக்க மாட்டான். எவனும் நம்பிக் கடன் தர மாட்டான். ஆத்திர அவசரத் துக்கு அஞ்சு பத்துக் கூட கைமாற்று வாங்க முடியாது.

கைக்கு எட்டினால் வாய்க்கு எட்டாத பிழைப்பு. வாய்க்கு எட்டினால் வயிற்றுக்கு எட்டாத பாடு. நல்லது பொல்லதுக்குக் கூட ஒரு புதுத் துணி எடுக்க வக்கில்லை.

ச்சே! சின்னச் சம்சாரியா பொழைக்கிற பொழப்பும் ஒரு மனுசப் பொழப்பா? இந்தக் கொடுமையிலேயே எத்தனை காலம் சீரழியறது? எப்பத்தான் கரை சேரப் போறோம்?

சொர்ணம்தான் கைகொடுக்கணும். கொடுப்பாளா?

வேலய்யா தாத்தா உயிரோடு இருந்தால் கேலி பண்ணிச் சிரிப்பார். கெக்கெலி பண்ணுவார்.

''நா சொல்றப்போ... பெரிசா துள்ளு னியே... இப்ப என்னடா ஆச்சு? நாஞ் சொன்னபடிதானே நீயும் மாறிட்டே?''

தாத்தாவே எந்திருச்சு வந்து கேள்வி கேட்கிற மாதிரி இருக்கிறது.

மனிதர் தெளிவான ஆள்தான். நெற்றி யில் அடித்த மாதிரி சொன்னாரே... அவர் வாயில் சீனியைத்தான் அள்ளிப் போட வேண்டும். அப்படியே பலித்து விட்டதே...

கருநாக்குக்காரன் சொன்னதும், கன்னி வாக்கும்தான் பலிக்கும் என்பார்கள். இந்தக் கிழடு சொன்னதும் நூல் பிசகாமல் பலித்து விட்டதே...

மனிதருக்கு அத்தனை தெளிவு, தீர்க்கம். மனிதர்களையும் வாழ்க்கையையும் அத்தனை துல்லியமாய் அளந்து, கைக்குள் வைத்திருக்கிறார். அனுபவம். அனுபவ வளமை.

எந்தெந்த வயதில் மனிதன் எப்படிச் சிந்திப்பான் என்று அவருக்கு அத்துப்படி யாகியிருக்கிறது. எந்தெந்த வயசில் எந்தெந்த வாழ்க்கைச் சூறாவளி மனுசனை எப்படிச் சுருட்டி அள்ளிக் கொண்டு போகும் என்பதை அறிந்து வைத்திருக்கிறார்.

தாத்தாவை நினைக்க நினைக்க வியப்பாக இருக்கிறது. தன்னை ஜெயித்து விட்டார் என்பதில் கூட ஒரு பிரமிப்புதான் வருகிறது. வருத்தம் வரவில்லை.

(தொடரும்)

அங்கக் குறைவு என்பது உடல் ஊனமாவது மட்டுமல்ல; பேச, கேட்க இயலாத குறையாகவும் இருக்கலாம். இத்தகையவர்கள், குடும்பத்திற்குச் சுமையாக இருக்கும் சோகத்தைக் காட்டிலும், 'இப்படி ஒன்றுக்கும் பலன் இல்லாமல் பிறந்து தொலைத்தோமே...' என்று உள்ளுக்குள் புழுங்கும் வேதனையின் சுமைதான் அதிகம். அதிலும் அங்கக் குறை, பெண்களுக்கு இருந்தால், அவர்களது துயரத்தைச் சொல்லவே வேண்டாம்.

குறையேதும் இல்லாத பெண்களுக்கே வரதட்சணைக் கொடுமையால் எதிர்காலம் ஒரு கேள்விக் குறி என்கிற போது, அங்க ஹீன பெண்களுக்குக் கேட்கவே வேண்டாம்.

ஆயினும் கேரளத்திலுள்ள ஆலவாய், கிழக்கம்பலம் பகுதியில் வாழும் இத்தகைய அங்கக் குறை உள்ள பெண்களுக்குக் 'குறையுடன் பிறந்து விட்டோமே...' என்ற தாழ்வு மனப்பான்மை இல்லை. காரணம், அவர்களைச் சொந்தக்காலில் நிற்கச் செய்கிறார், எம்.சி. ஜேக்கப்; கி டெக்ஸ், அன்னா அலுமினியம் நிறுவனங்களின் தலைவர்.

தூய பருத்தி நூலில், கைலி, படுக்கை விரிப்புகள் தயாரித்து ஏற்றுமதி செய்து வரும் 'கி டெக்ஸ்' நிறுவனத்தில் பணிபுரியும் 800 பேரில் சுமார் 250 பேர் அங்கக் குறையுள்ளவர்கள். அவர்கள் முகங்களில், ''சுயமாகச் சம்பாதித்து சொந்தக் காலில் நிற்கிறேன்...'' என்கிற பெருமிதப் பூச்சு. 'குறை'யுள்ள பெண்களில், கேட்க, பேச இயலாத பெண்களே அதிகம்.

''இந்த அபலைப் பெண்களுக்கு அன்புக் கரம் நீட்டி, வாழும் வகை செய்து தர, உங்களுக்கு எப்படி உந்துதல் பிறந்தது...?'' ஜேக்கப்பிடமே கேட்டோம்.

''எனது சிறு வயதில், எங்கள் வீட்டிற்கு ஓர் ஊமைப் பெண் வந்து கொண்டிருந்தாள். தன் குடும்பத்தினராலும், அக்கம் பக்கம் வசிப்பவர்களாலும் எப்படியெல்லாம் இழிவாக நடத்தப்படுகிறாள், கேலி செய்யப்படுகிறாள் என்பதை அழுது கொண்டே சைகை மூலம் அந்தப் பெண், எனது தாயிடம் விவரிப்பாள்; விசும்பி அழுவாள். இந்த மாதிரி பெண்களுக்கு உதவி செய்ய வேண்டும்; இவர்களுக்கு வேலை தந்து, சொந்தக் காலில் நிற்கச் செய்ய வேண்டும். அதற்கு என்னால் ஆன எளிய உத்திரவாதம் தர வேண்டும் என்று தீர்மானித்தேன். எனது குடும்பம் பொருளாதார ரீதியாக நல்ல நிலைமையில் இருந்ததால், 1968ல் அன்னா அலுமினியம் தொழிற்சாலையை எட்டுத் தொழிலாளர்களுடன் ஆரம்பித்தேன்...

''அலுமினியத் தயாரிப்பில் பல கலப்படங்கள் உண்டு. காரீயம், அல்லது மெலிதான எஃகு துகள்களைக் கலந்து, தயாரிப்புச் செலவினைக் குறைப்பார்கள். அதனால் கலப்பட அலுமினியத்திற்கு விலை குறைவு. தூய அலுமினியத்திற்கு விலை அதிகம். தரமான நூறு சதவீதம் சுத்தமான அலுமினியத்தைத் தயாரிப்பது தான் எனது லட்சியமாக இருந்தது. ஆரம்ப காலத்தில் எனது சுத்த அலுமினியப் பொருட்கள் விற்பனை ஆகாமல், லட்சக் கணக்கில் நஷ்டம் ஏற்பட்டது. சில ஆண்டு

* கலப்படமில்லாத தரமான அலுமினியப் பொருட்களுக்குத் தேவை அதிகரித்துள்ளது



* ஜேக்கப்



# தொழிற்சாலையில் உற்பத்தியாகும் மானுட நேயம்!



★ ஜேக்கப்; பரமேசுவரன்; பேச - கேட்க இயலாத பெண் தொழிலாளர்கள்

களில் காலம் மாறியது. தரமான அலுமினியத்திற்குத் தேவை அதிகமாகவே, லட்சக் கணக்கில் நஷ்டம் என்பது லாபம் என்றானது.

''இந்த நிலையில்தான் அன்னா அலுமினியம் நிறுவனத்தில் அங்கஹீன மாணவர்களை வேலைக்கு வைத்துப் பரீட்சித்துப் பார்க்கலாமே என்று தீர்மானித்து, அதில் வெற்றியும் கண்டேன். இப்போது பார்வை தெரியாத, நடக்க, பேச, கேட்க இயலாத ஆண், பெண் பலரும் இங்கு பணிபுரிகிறார்கள். சுய தொழில் வாய்ப்புத் திட்டத்தின் கீழ், மத்திய அரசு கேரளத்திற்கு அளித்த 400 விசைத் தறிகளை ஓடச் செய்ய, கேரள அரசு எனது உதவியை நாட, 1980ல் 'கி டெக்ஸ்' நிறுவனத்தையும் தொடங்கினேன். இதில் சுமார் 250 அங்கஹீனமான பெண்கள்... குறிப்பாக கேட்க, பேச இயலாதவர்கள் பணிபுரிகிறார்கள்!'' என்கிறார் ஜேக்கப்.

''அன்னா அலுமினியம், கி டெக்ஸ் நிறுவனங்களுக்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன் சோதனைக் காலம் வந்தது. ஒரு தொழிற்சங்கத்தினர், போலி உறுதிமொழிகளைத் தந்து, தொழிலாளர்களை வேலை நிறுத்தம் செய்ய வைத்தனர். வன்முறையும் அவிழ்த்து விடப்பட்டது. வேலை நிறுத்தம் 325 நாட்கள் தொடர்ந்தது. இரண்டு நிறுவனங்களையும் மூடிவிடலாம் என்ற கட்டாயத்திற்கு ஜேக்கப் வந்து விட்டார். ஆனால், அவர் பக்கம் இருந்த கேட்க, பேசத் தெரியாத பெண் ஊழியர்கள், 'ஐயோ... நிறு வனங்களை மூடி விட்டால், எங்கள் வயிற்றுப் பிழைப்பு என்ன ஆவது... எங்களை யார் காப்பாற்றுவார்கள்...?' என்று கண்ணீர் சிந்த... நெகிழ்ந்து போன ஜேக்கப், தமது முடிவை மாற்றிக் கொண்டார். 'வேலை நிறுத்தம் தொடர்ந்தாலும், நிறுவனங்களை மூடமாட்டேன்... உள்ள தொழிலாளர்களைக் கொண்டு வேலைகளைத் தொடருவேன்...' என்று தீர்மானித்தார்.

''வேலை நிறுத்தம் நடந்து கொண்டிருந்த போதே, உண்மை நிலைமையை உணர்ந்து, சிறிது சிறிதாகத் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பினர். அவர்களைப் புன்னகையுடன் ஜேக்கப் வரவேற்றார். பிரிந்த குடும்பம் ஒன்றாகச் சேர்ந்த சந்தோஷம் ஜேக்கப்பிற்கு. உறவு இன்னும் பலப்பட்டது. உரிமையாளர், தொழிலாளி வேற்றுமை இங்கு இல்லை. ஒரு குடும்பமாக இருக்க, அனைவருமே பழகிக் கொண்டு விட்டார்கள். தொழிலாளர்கள் முகத்தில் குடியிருக்கும் மலர்ச்சியே இதற்குச் சான்று....' என்கிறார் 'கி டெக்ஸ்' நிறுவன சட்ட ஆலோசகரும், கொச்சி நகர முக்கியப் பிரமுகரும், தமிழரும், அகில இந்திய பிராமண சபையின் பொதுச் செயலாளருமான எஸ். பரமேசுவரன்.

'கி டெக்ஸ்' நிறுவனத்தைச் சுற்றிப் பார்த்தோம். தொழிலாளர்களில் தொண்ணூறு சதவீதம் பெண்கள். மூன்று ஷிஃப்ட். பெண்கள் அங்கேயே தங்க ஹாஸ்டல் வசதிகள் உண்டு. ஹாஸ்டலில் பொழுது போக்க டீவி, வி.சி.ஆர், நூலக வசதிகள் இருக்கின்றன. சுவையான உணவு; இனிமையான சூழ்நிலை.

கேட்க, பேச இயலாத சிலரிடம், 'சம்பளம் எவ்வளவு கிடைக்கிறது' என்று சைகையால் கேட்டோம். ரூ 600லிருந்து ரூ 850 வரை கிடைக்கிறது என்று எழுதிக் காட்டினார்கள். இது தவிர போனஸும் உண்டு. ஹாஸ்டல் செலவு ரூ 200க்குள் நிற்கிறது. ஒரு குறிப்பிட்ட தொகையைக் கட்டாய சேமிப்பிற்காகப் பிடிக்கிறார்கள். மீதத்தைத் தங்கள் குடும்பத்திற்கு அனுப்பி உதவுகிறார்கள்.

இந்தப் புரட்சியை ஓசையில்லாமல் செய்திருப்பதினால் பாராட்டுக்குரியவராகும் ஜேக்கப், ''பேச கேட்க இயலாதவர்கள் எப்போது வந்தாலும், அவர்களை வேலைக்குச் சேர்த்துக் கொள்வேன். இதர குறை உள்ளவர்கள், வேலையைப் புரிந்து பழகிக் கொள்ள வேண்டும் என்பதால் 25 வயதிற்குள் இருப்பது நல்லது...'' என்கிறார்.

கி டெக்ஸ், அன்னா அலுமினியம் வெறும் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் மட்டும் அல்ல; மானுட நேயத்தையும் உற்பத்தி செய்கின்றன.

கட்டுரை,
படங்கள் : பிஸ்மி பரிணாமன்

# பாப்கார்ன் கனவுகள்

ம.வே.சிவகுமார்

## 3

தலைமாட்டில் கர்ண கடூரமாய்க் கேட்கிற மாமனாரின் கட்டைக் குரலில் லக்ஷ்மிநாராயணன் கண் விழிக்கிறான். விஜயலக்ஷ்மியின் பெற்றோர்கள் கல்யாணம் நல்லவிதமாய் முடிந்ததற்கு ஒரு நடை காரில் திருப்பதி போய்க் காசு கொடுத்துத் தரிசனம் முடிந்து. அதிகாலையில் இறங்கியிருக்கிறார்கள். வீட்டுச் சொந்தக்கார நவகோடி அம்மாள் அதட்டல் போட்டதில் முதலில் இல்லை என்று சொன்ன பால்காரன், தாராளமாய்க் கொசுறும் ஊற்றிக் கணக்கைத் துவங்குகிறான். கண்ணுக்குப் புலப்படாமல் வீட்டுக்குப் பக்கத்தில் ஓடுகிற தண்டவாளத்தில் இரயில் ஒன்று அந்த விடியற்காலை நேரத்தில் உற்சாகக் கூச்சலிட்டு விரைகிற சப்தம் கேட்கிறது.

''லக்ஷ்மி....''

லக்ஷ்மிநாராயணன் நிமிர்ந்து பார்க்கிறான்.

''பா, பா...''

மாட்டை ஓட்டிக் கொண்டு செம்மண் பாதையில் பால்காரன் போகிறான்.

கொல்லைப்புறம். மகளைத் தனியே அழைத்துச் சென்று தலை முதலாவற்றைத் தடவிக் கொடுத்து, தாழ்ந்திய குரலில் விஜயலக்ஷ்மியின் தாயார் ஆவலுடன் மேற்கொண்டு விவரம் கேட்க, அவள் வெட்கத்தில் தலைகுனிந்து முகம் சிவந்து போகிறாள்.

வரவேற்பறை. கண்ணாடி அலமாரியில் சீராய் அட்டை போட்டு அடுக்கியிருக்கிற புத்தகங்களை மாமனார் வியப்புடன் பார்க்கிறார். லக்ஷ்மிநாராயணன் வெறும் விளையாட்டுப் பையனில்லை போலிருக்கிறது. பெரும் படிப்பாளியாக இருக்க வேண்டும். இத்தனை புத்தகங்களா அவன் படித்திருக்கிறான்? மகள் விஜயலக்ஷ்மியிடம் மாமனார் ஆச்சர்யப்படுகிறார். அது சரி, அலமாரியின் சாவி எங்கே? மகிழ்ச்சி மேலிட மாமனார் கேட்கிறார். தன் கணவரிடம் கேட்கச் சொல்லி அவர் மகள் காப்பி தம்ளரை வாங்கிப் போகிறாள்.

''சாவியா?''

லக்ஷ்மிநாராயணன் அலமாரிக்கு நடந்து அதை ஆசையாய் தடவியபடி தொடர்கிறான்.

''ஒரு பயலுக்கும் தரமாட்டேன். சும்மாவா? ஆரம்பத்திலேர்ந்து பைண்டு பண்ணி வைச்சிருக்கேன். மேல் வரிசை சினிமா எக்ஸ்பிரஸ். கீழே பொம்மை. அப்புறம் வண்ணத்திரை, பேசும்படம், பிலிமாலயா. இது சிவாஜியோட ஆல்பம். பராசக்தியிலேர்ந்து எல்லா படத்து ஸ்டில் ஸும் இருக்கு. இது எம்.ஜி.ஆர். அது ஜெய்சங்கர், முத்துராமன், ஜெமினி கணேசன்.. பொதுவா யாருக்கும் தர்றதில்லை. மதிப்புக்குரிய மாமனார் அவர்கள் கேட்கும் போது மறுக்கவும் மனசில்லே. பரவாயில்லே, சாவி தர்றேன். பாக்கறீங்களா?'' என்று லக்ஷ்மிநாராயணன் மாமனாரைக் கேட்கிறான்.

''வேணாம்.''

கடுப்பில் மாமனார் தலையை வேகமாய் அசைக்கிறார்.

பெட்டி, படுக்கைகள் தயாராய் இருக்கின்றன. கல்யாணம் முடிந்து, டில்லியில் மணமக்கள் வரவேற்புக்கு அனைவருமே புறப்படுகிறார்கள். அந்தப் புறநகரின் செம்மண் பாதையில் டாக்சியொன்று வட்டமாய்ப் புழுதி கலைத்து நிற்கிறது. கதவைப் பூட்டி வீட்டுச் சொந்தக்கார நவகோடி அம்மாளிடம் சாவியை விஜயலக்ஷ்மி கொடுக்கிறாள்.

விஜயலக்ஷ்மியின் பெற்றோர்கள் நவகோடி அம்மாளிடம் விடைபெறுகிறார்கள். விஜயலக்ஷ்மி செல்லமாய் வீட்டிற்குள் வளர்ந்தவள். உலகம் தெரியாது. சாது. ரிசப்ஷன் முடிந்து திரும்பியவுடன் அவளை

நீங்கள்தான் பெரியவர்களாய் அவ்வப்போது பார்த்துக் கொள்ள வேண்டும் என்று சற்றே தழு தழுத்து மாமனார் முடிக்கிறார்.

ஸ்டேஷனில் லக்ஷ்மிநாராயணனின் பெற்றோர்களும் சேர்ந்து கொள்கிறார்கள். புது டில்லி செல்லும் கிராண்ட் ட்ரங்க் எக்ஸ்பிரஸ், முதல் பிளாட்பாரத்திலிருந்து புறப்படுகிறது.

டில்லியில் வரவேற்பு. அறிமுகப்படுத்தப்படுகிற ஒவ்வொரு முறையும் ஹிந்தியில் ஏதோ அடுக்கியவாறு தன்னை ஏன் வட இந்தியர்கள் கட்டிக் கொள்ள வேண்டும் என்றே லக்ஷ்மிநாராயணனுக்குப் புரியவில்லை. இரவு ஏழரை மணி. வெளியே அபத்தமாய் வெயில் அடிக்கிறது. கோட்டு, சூட்டு அணிந்து இன்னும் எவ்வளவு நேரம் நிற்க வேண்டும்? இதோ, தங்க பிரேம் கண்ணாடி நடுவில் குங்குமம் பளீரிட வெள்ளைப்புடைவை ஹிந்திக் கிழவி லக்ஷ்மிநாராயணன் கன்னத்தில் உரிமையாய் இழைத்துப் பேசுகிறாள். காரே, பூரேயென்று ஹிந்திப் பாட்டு. வெள்ளை இடுப்பு வழிகிற டில்லிப் பெண்கள். விஜயலக்ஷ்மியின் காதருகில் குனிந்து லக்ஷ்மிநாராயணன் அன்றைய இரவுக்கான தன் திட்டங்களைக் கூறுகிறான். விஜயலக்ஷ்மியின் முகம் சிவந்து போகிறது.

பார்த்துச் செலவழிக்க வேண்டும் என்று எச்சரிக்கப்பட்ட தண்ணீரைக் கொஞ்சம் தாராளமாகவே முகத்திலும், முதுகிலுமாக லக்ஷ்மிநாராயணன் ஊற்றிக் கொள்கிறான். பயங்கர தகிப்பு. சென்னையின் வெயில் போல் அல்லாமல் ஆளை அழுத்துகிறது. நடுவே ஒரு தடவை சூரியன்



இறங்கிப் போனது மாதிரியே தரை, சுவர், மெத்தை, மேஜை, நாற்காலி, கைப்பிடி என்று தொட்டதெல்லாம் சுடுகிறது. ஈரம் சொட்டச் சொட்ட லக்ஷ்மிநாராயணன் துண்டெடுத்துத் திரும்புகிறான். முன்னறிவிப்பு எதுவுமின்றி அவன் மூக்கிலிருந்து 'கொட கொட' என்று இரத்தம் கொட்டுகிறது.

பரபரப்படைந்த சூழல். யாரோ ஓடிப் போய் ஐஸ்கட்டி எடுத்து வருகிறார்கள். லக்ஷ்மிநாராயணன் தலையணைகளில் அண்ணாந்து பார்த்தாற்போல் படுக்க வைக்கப் படுகிறான்.

''அப்படியே மேல பார்த்துண்டிருங்கோ....''

பக்கத்தில் மாமனார் முகம் சொல்லிப் போகிறது. படுத்த வாக்கில் விசித்திர கோணத்தில் விஜயலக்ஷ்மி. லக்ஷ்மிநாராயணனுக்கு அன்றைய இரவு அண்ணாந்து கழிகிறது.

டில்லியைச் சுற்றி பிரசித்தி பெற்ற இடங்களைப் பார்க்க டூரிஸ்ட் பஸ் ஒன்றில் அனைவரும் புறப்பட்டுப் போகிறார்கள். ஆக்ரா, மதுரா, ஃபதேபுர் சிக்ரி என்று எல்லாமும் திட்டத்தில் இருக்கிறது. புது மனைவியுடன் சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்களில் லக்ஷ்மிநாராயணன் நடக்கிற போது முற்பிறவியொன்றில் தான் ஒரு மொகலாய மன்னராக இருந்திருக்க வேண்டும், என்று திட்டவட்டமாய் உணர்கிறான். விதி அவனுக்கு தாஜ்மஹாலில் காத்திருந்தது.

''இது இறந்து போன ராணிக்காகக் கட்டப்பட்ட தாஜ்மஹால் அல்ல; உயிரோடு இருக்கும் என் இதயத்து ராணிக்கு நான் கட்டிய வசந்த மாளிகை.''

யாரும் பார்க்காத போது லக்ஷ்மிநாராயணன், விஜயலக்ஷ்மியின் மோவாயைக் கையில் ஏந்தி வசனம் பேசுகிறான். அப்படியும் அவனுடைய மாமியார் பார்த்து விடுகிறாள். 'இதிலெல்லாம் ஒன்றும் குறைச்சலில்லை' என்று நினைத்திருப்பாள். ஆண்டவனே! அடுத்து என்ன செய்யலாம்?

சிந்தனையில் அடுத்தடுத்து மறைவில் இரண்டு, மூன்று சிகரெட் பிடித்துக் கவலை ரேகையுடன் லக்ஷ்மிநாராயணன் திரும்புகிறான். அடையாளம் பார்த்து விட்டுச் சென்ற இடத்தில் யாரையும் காணவில்லை. நிற்கிற எண்ணற்ற பஸ்களில் அவர்கள் வந்த பஸ் எதுவென்றும் தெரியவில்லை.

கண்கள் கலங்கி அழுகையில் முகத்தில் அழுக்குத் தெரிய, தான் தொலைந்து விட்ட விவரத்தைத் தன் பன்மொழித் திட்டத்தின் கீழ் ஒரு தாடி வைத்த வயசான சர்தார்ஜியிடம் லக்ஷ்மிநாராயணன் விளக்க முயற்சி செய்கிறான். அவன் சொல்லுகிறதையெல்லாம் உன்னிப்பாய், தாடியை வருடியபடி கேட்டு விட்டு சர்தார்ஜி எதுவுமே புரியவில்லையென்று உதடு பிதுக்குகிறார்.

கௌரவமாய் உடையணிந்த இன்னொருவர் தலையாட்டிக் கேட்டுவிட்டு எதுவும் பேசாமல் இரண்டு ரூபாய் கொடுத்துப் போகிறார். அந்த நேரத்துக்கு அது தேவையாகவும் இருக்கிறது.

லக்ஷ்மிநாராயணனின் கஷ்டங்களைப் பற்றிக் கவலைப்படாமல் ஆக்ரா நகரமே வேர்க்கடலை சாப்பிட்டுக் கொண்டும், தாஜ்மஹால் முன் நின்று புகைப்படம் எடுத்துக் கொண்டும் இருக்கிறது. தாகம் தாங்காமல் அருகே மோர் விற்கிற கடை முன் லக்ஷ்மிநாராயணன் வந்து நிற்கிறான். ஆசாரமாய் ஒருவன் அம்மியில் பச்சிலை அரைத்துக் கொண்டிருக்க, கண்கள் செருக சிவபெருமான் ஏதோ பச்சிலை பானத்தைக் குடிப்பது போல் ஒரு படம் மாட்டப்பட்டிருக்கிறது.

அது வடக்கே வெகு சகஜமான 'பாங்க்' என்ற போதை வஸ்து. மோரில் கலந்து பகிரங்கமாய் விற்கிற இடம். அந்த விவரம் தெரியாதவனாக தாகத்துக்கு இரண்டு கிளாஸ் குடித்த கொஞ்சம் நேரத்துக்கெல்லாம் ஆக்ராவே ஆடுகிறது. வாயில் எப்போதோ கேட்ட ஹிந்திப் பாடல் புறப்படுகிறது.

அன்றைக்கு இரவு தாஜ்மஹால் தெரிகிற மொகலாய வளைவில் லக்ஷ்மிநாராயணன் களைப்புடன் படுத்துக் கொள்கிறான். முகத்தில் வெயில் அடித்து விழிக்கிற போது, எதிரே விஜயலக்ஷ்மி உள்ளிட்ட அனைவருமே நிற்கிறார்கள். நேற்றைக்குப் பூராவும் அவனைப் பல இடங்களில் தேடியிருக்கிறார்கள். இரவு ஹோட்டலில் தங்கி இதோ நல்ல வேளையாய் அவனைக் கண்டு பிடித்தும் விட்டார்கள்.

பஸ்ஸில் மீண்டும் டில்லியை நோக்கிய பயணம். அன்றைக்கு மாலை கிராண்ட் ட்ரங்க் எக்ஸ்பிரஸில் மறுபடி சென்னைக்குத் திரும்ப வேண்டும். அடுத்த இரண்டு இரவுகளும் வழக்கம் போல் லக்ஷ்மிநாராயணனுக்கு இரண்டாம் வகுப்பு இரயில் பெட்டியில் சுற்றிலும் சாட்சிகளுடன் வெறுமனே கழியப் போகிறது. விஜயலக்ஷ்மி, கணவனைப் பார்க்கிறாள். லக்ஷ்மிநாராயணன் ஜன்னலில் தலையைத் திருப்பிக் கொள்கிறான்.

(தொடரும்)

## முன் வெளியீட்டுத் திட்டம்

புதிய சந்தாதாரராகப் பொன்னான வாய்ப்பு

# 30% சலுகை உண்டு

இம் மாதம் 15ஆம் தேதிக்குள் பணம் செலுத்துவோர்க்கே இந்தச் சலுகை. இத் திட்டத்தின்படி எமது பின்வரும் இரு நூல்கள் வாங்குவோர், எமது பதிப்பகத்தின் புதிய சந்தாதாரராகக் கருதப்படுவர். அவர்கள் எங்களது பிற தமிழ் நூல்களையும் இதே சலுகையில் தொடர்ந்து வாங்கலாம்.

1. **தேம்பாவணி** (மூலமும் தெளிவுரையும்) — ரூ.250.00
   மூன்று தொகுதிகள்
   (உரையாசிரியர்: M.R. அடைக்கலசாமி, M.A., தமிழ்ப் பேராசிரியர், லயோலா கல்லூரி, சென்னை)
2. **ஆங்கிலப் பேரகராதி** — ரூ.100.00
   (Prof. Sadasivarao, Retd. Prof. of English Pachaiyappa's College, Madras.)

| | |
|---|---|
| | 350.00 |
| சலுகை 30% | 105.00 |
| | ரூ.245.00 |

ரூ.245 M.O or D.D செய்க. தேம்பாவணி இம்மாதம் 15-ஆம் தேதிக்குப் பிறகும், ஆங்கிலப் பேரகராதி டிசம்பர் 10-ஆம் தேதிக்குப் பிறகும் அனுப்பப்படும். தபால் செலவினை மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறலாம். பணம் அனுப்ப வேண்டிய முகவரி :

**Varthamanan Pathippagam,**
**A.R.R. Complex**
**141, Usman Road, T.Nagar, Madras-17.**
**(Near Panagal Park)**

### மூலமும் தெளிவுரையுமாக அமைந்த எமது பிற நூல்கள்

1. கம்பராமாயணம் 9 தொகுதிகள் Rs.460 2. பெரிய புராணம் 6 தொகுதிகள் Rs.250 3. திருவிளையாடற் புராணம் 5 தொகுதிகள் Rs.200 4. நீதி நூல் திரட்டு 5 தொகுதிகள் Rs.75 5. புறநானூறு 2 தொகுதிகள் Rs.75 6. பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் 5 தொகுதிகள் Rs.144 7. சிலப்பதிகாரம் Rs.60 8. பட்டினத்தார் பாடல்கள் Rs.60 9. தாயுமானவரின் திருப்பாடல்கள் 2 தொகுதிகள் Rs.80 10. திருக்குறள் Rs.37 11. நாலடியார் Rs.22 12. நளவெண்பா Rs.27 13. சரசுவதி அந்தாதி Rs.4 14. சடகோபர் அந்தாதி Rs.9 15. திருவாய்மொழி 2 தொகுதிகள் Rs.70 16. யாப்பருங்கலக்காரிகை Rs.30

### விரைவில் வெளிவர உள்ள நூல்கள்

1.கந்தபுராணம் (2ம் பதிப்பு) 2. வில்லிபாரதம் (2ம் பதிப்பு) 3. திருப்புகழ் 4. திருமந்திரம் 5.தேவாரம் 6. பாகவதம் 7. அரிச்சந்திர புராணம் 8. குசேலோபாக்கியானம் 9. பஞ்சதந்திரப் பாடல்கள் இன்னும் பல.



# உயர் நீதிமன்றக் கட்டடத்திற்கு வயது நூறு!

**ச**மீபத்தில், கோடிக்கணக்கான ரூபாய்ச் செலவில் உருவாகியுள்ள, 'ஜெ' திறந்து வைத்த உயர்நீதிமன்ற "அனெக்ஸ்" கட்டடத்தில் ஒரே எதிரொலி; காற்றோட்டம் கிடையாது என்பதை எல்லாம் சற்றே மறந்து விடவும். பழைமையான, கம்பீரமான, சென்னை உயர்நீதிமன்றக் கட்டடத்தைத் தலைநிமிர்ந்து பார்க்கவும். இதற்கு நூறு வயது ஆகிறது.

1892ல், பதின்மூன்று லட்ச ரூபாய்ச் செலவில் இந்தக் கட்டடத்தைக் கட்டினார்களாம். உயர்நீதி மன்றக் கட்டடச் சாவியை, ஆளுனர் வென்லாக் பிரபு, அன்றைய தலைமை நீதிபதி சர் ஆர்தர் காலின்ஸிடம் கொடுத்த போது, காலின்ஸ் சொன்னார் :

"கவர்னர் அவர்களே, நீங்களும் நானும் மறைந்த பிறகும் சாதி, மத, இன வேறுபாடுகளைக் கடந்த, திறமையும் தைரியமும் மிக்க மனிதர்களால் இந்த நீதிமன்றத்தில் மக்களுக்கு நீதி கிடைக்கும் என்று நம்புகிறேன்!"

அரசின் செங்கல் சூளையில் தயாரான செங்கல்லும், இறக்குமதி செய்யப்பட்ட இரும்பு கர்டர்களும் கொண்டு இந்தோ-இஸ்லாமிய வடிவமைப்பில் உருவானது இந்தக் கட்டடம். சிமெண்ட்டே கிடையாது!

அதற்கும் முன்பு, 1862 முதல் 1892 வரை, கடற்கரைச் சாலையில் துறைமுகத்துக்கு எதிரே இருந்த கலெக்டர் ஆபீசில்தான் முதலில் உயர்நீதி மன்றம் இயங்கியது. (இந்தக் கட்டடம் இப்போது இடிக்கப்பட்டு வருகிறது.)

முதல் உலகப் போரின் போது ஜெர்மானியக் கப்பல் எம்டன் 22.9.1914ல் குண்டு வீசிய போது, நீதிமன்றக் கட்டட வளாகத்தின் சுவர் தகர்க்கப்பட்டது. அதனால் இரண்டாம் உலகப் போரின் போது, உயர்நீதி மன்றம் கோவையில்தான் இயங்கியதாம்!

இந்தக் கட்டடத்தைப் போலவே, சென்னை உயர்நீதிமன்றத்துக்கும் பாரம்பரியப் பெருமை நிறையவே உண்டு.

* கட்டடத்துக்கு நூறு வயதானதை கேக் வெட்டிக் கொண்டாடுகிறார் உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதி. அருகே லஸிட் அணிந்து ரவீந்திரன



ஆனால் -

இன்றைக்கு நீதித் துறை எப்படி இருக்கிறது?

**உ**யர்நீதி மன்றம் உருவான மறு வருடமே ஆரம்பிக்கப் பட்டது சென்னை பார் அசோசி யேஷன். அதன் இன்றையச் செயலர் எம். ரவீந்திரன் சொன் னார் :

''சபார்டினேட் ஜுடிஷியரி எனப்படும் சார்பு நீதிபதிகள் அள வில் ஊழல் இருக்கத்தான் செய் கிறது.''

''எப்படி ஊழல் நிலவுகிற தாகச் சொல்லுகிறீர்கள்?''

''நில ஆர்ஜித வழக்குகளில், மாவட்ட ஆட்சித் தலைவர் கைய கப்படுத்தும் போது, அதைச் சார்பு நீதிமன்றம்தான் உறுதி செய்கிறது. இங்கேதான் ஊழல் உருவாகிறது. இன்னொன்று, போக்குவரத்து வாகன விபத்து வழக்குகளை விசாரிக்கும் போது உருவெடுக்கும் ஊழல். இன்ஷ்யூரன்ஸ் நிறு வனம்தானே நஷ்டஈடு கொடுக்கிறது என்ப தால் இடையே நடைபெறும் பேரத்தில் உருவாகிறது இந்த ஊழல். இவை இரண் டுமே எல்லாருக்கும் தெரிந்ததுதான்.

''67ல் தி.மு.க. ஆட்சிக்கு வந்த போது, முன்சீப், சார்பு நீதிபதி பதவிகளுக்கு, கூட் டுறவுத் துறை, கால்நடைத் துறை, தலை மைச் செயலகம் முதலியவற்றிலிருந்து ஆட்களை நியமித்ததிலிருந்துதான் லஞ்ச ஊழலே ஆரம்பித்தது!'' என்கிறார் ரவீந் திரன்.

உயர்நீதி மன்ற விஜிலன்ஸ் அதிகாரிக் கும், தலைமை நீதிபதிக்கும் பொது மக்க ளிடமிருந்து ஒவ்வொரு நாளும் நூற்றுக் கணக்கான புகார்ப் பட்டியல்கள் வருகின் றனவே, இவை எல்லாமே கீழ் மட்ட நீதி மன்றங்களில் நடைபெறும் லஞ்ச ஊழல் பற்றித்தானாம்!

''ஊழல் எங்கே தோன்றுகிறது என்பது எல்லோருக்கும் தெரியும் என்கிறீர்கள். அப் படியானால் அதைத் தடுக்க வழியே இல்லையா?''

''ஒரு நீதிபதிக்குப் பதில் இரண்டு



* உயர்நீதி மன்றத்தின் பழைய கட்டடம் (இப்போது இடிக் கப்பட்டு வருகிறது)

நீதிபதிகள் இம் மாதிரி வழக்குகளை விசாரிக்க வேண்டும். அல்லது, இந்தக் கீழ்மட்ட நீதிமன்றங்களின் தீர்ப்பு, உயர்நீதி மன்றம் அப்ரூவ் செய்ய வேண்டிய சிபாரிசு அளவிலேயே இருக்க வேண்டும். அதாவது மரண தண்டனை வழங்கும் உயர்நீதி மன்றத் தீர்ப்புகளை உச்சநீதி மன்றம் பரிசீலனை செய்து உறுதி செய்வது அல்லது முடிவு செய்வது போல இருக்க வேண்டும். அப்போதுதான் அங்கே ஊழலின் ஊற்றுக் கண் அடைய வழியுண்டு.

''வேறு எந்தத் துறையில் ஊழல் இருந்தாலும் ஒரு தோசத்தால் சமாளித்துக் கொள்ள முடியும். ஆனால், நீதித் துறையில் ஊழல் என்றால் அது ஜனநாயகத்தின் ஆணி வேரையே பாதிக்கும். தண்டிக்கிற உரிமை கடவுளுக்குத்தான் உண்டு என்று மக்கள் நம்புகிறார்கள். இந்த நிலையில் நீதிபதிகள் மரண தண்டனை உட்படப் பல்வேறு தண்டனைகளைத் தருகிறார்கள் என்றால் என்ன பொருள்? நீதிபதிகள் என்பவர்கள் கடவுளின் பிரதிநிதிகள் என்கிற அளவுக்கு உயர்ந்த பதவியில் இருக்கிறார்கள் என்றுதான் அர்த்தம். இதை ஒவ்வொரு நீதிபதியும் உணர்ந்து செயல்பட்டால் நீதித் துறையில் ஊழலே இருக்க முடியாது!'' என்கிறார் ரவீந்திரன்.

''வழக்குகள் இந்த அளவுக்குத் தேங்கிக் கிடக்கின்றனவே? சில வழக்குகள் 20 - 25 வருடங்களாக முடிவு செய்யப்படாமல் இருப்பதற்கு என்ன காரணம்?''

''வழக்கறிஞர்கள் மிக அற்பமான காரணங்களுக்காக வாய்தா வாங்கிக் கொண்டே போவது ஒரு காரணம். ஒரு வழக்கில் மூன்று வாய்தாக்களுக்கு மேல் கொடுக்கப் படக் கூடாது என்று உச்ச வரம்பு இருக்க வேண்டும்! புதிய அணுகுமுறைகளை, காலத்திற்குத் தகுந்த மாதிரி உருவாக்க வேண்டாமா?

''கட்சிக்காரர்கள் தங்களுக்குள் பேசி சமரசத்துக்கு வர வழக்கறிஞர்கள் முதலில் உதவி, அது முடியாது போனால் நீதிமன்றம் செல்வது என்ற அணுகுமுறையும் வழக்குகள் நீதிமன்றத்தில் குவிவதைத் தவிர்க்கும்.

''நீதிபதிகளை நியமிப்பதில் அரசியல் காரணமாக ஏற்படும் தேவையற்ற கால தாமதம் மேலும் ஒரு காரணம். ஒரு நீதிபதி வேலையில் அமர்த்தப்படும்போதே, அவர் எப்போது ஓய்வு பெறுவார் என்பது தெரியும். அதற்கு ஆறு மாதங்கள் முன்னாலிருந்தே புதிய நீதிபதியைத் தேர்ந்தெடுப்பதற்கான வழிமுறைகளைத் துவக்கினால் என்ன?'' என்று கேட்கிறார் ரவீந்திரன்.

*சந்திப்பு, கட்டுரை : சாருகேசி*

# வோட்டு அறுவடையும் நோட்டு அச்சடிப்பும்!

**ந**மது நாட்டில் பணக்கார மாநிலங்கள் என்று கருதப்படுகிறவை சில : மகாராஷ்டிரா, குஜராத், பஞ்சாப், மேற்கு வங்கம், ஏன், தமிழ்நாடு கூட! இங்கெல்லாம் தனி நபர் சராசரி வருமானம் இதர பல மாநிலங்களை விடவும் அதிகம். ஏழை மாநிலங்கள் என்று கருதப்படுகிறவை : பீகார், மத்தியப் பிரதேசம், உத்தரப்பிரதேசம். இதர பல மாநிலங்கள் இவற்றுக்கு இடைப்பட்டவை.

மத்திய அரசுக்குத்தான் வரி வருவாய் அதிகம் கிடைக்கிறது. தனிநபர் வருமான வரி, கம்பெனிகள் வருமான வரி, உற்பத்தி வரி, சுங்க வரி போன்ற பல வரிகள் மத்திய அரசுக்கே போகின்றன. மாநில அரசுகளுக்கு வரி விதிக்கும் வாய்ப்பு குறைவு. விற்பனை வரி, மது வகைகள் மீதான உற்பத்தி வரி, சொத்து கைமாறும் போது விதிக்கப்படும் பதிவுக் கட்டணம், வாகனங்கள் மீதான வரி, மின் கட்டணம், நில வரி போன்ற சில இனங்கள் மூலம்தான் மாநில அரசுக்கு வருவாய் கிடைக்கிறது.

கடந்த பல ஆண்டுகளில் விற்பனை வரிதான் மாநிலங்கள் பலவற்றுக்கு முக்கியமான வருவாயாக இருந்து வருகிறது. விற்பனை வரி மூலம் மாநில அரசுக்குக் கிடைக்கும் தொகை, அம் மாநில மக்களின் வாங்கும் சக்தியை அளவிட்டுக் காட்டுவதாக அமைகிறது. சில டம்பப் பொருள்கள் மீது மாநில அரசுகள் 20 சதம் வரை கூட விற்பனை வரி விதிக்கின்றன.

**ம**த்திய அரசு தனக்குக் கிடைக்கும் வரி வருவாயிலிருந்து, ராணுவத்துக்கும், அயல் நாடுகளில் உள்ள நமது தூதரகங்களின் பராமரிப்பு, மத்திய அரசு ஊழியர்களின் சம்பளம் போன்ற பல அம்சங்களுக்கும் செலவிடுகிறது. மிஞ்சுகிற பணம், நீண்ட கால நோக்கில் பயன்தரத்தக்க திட்டங்களுக்கு (அணை கட்டுதல், சாலை அமைத்தல், பிரும்மாண்ட எஃகு ஆலைகள் போன்றவை) செலவிடப்படுகிறது. இதற்கெல்லாம் பணம் போதிய அளவில் மிஞ்சாத




போது அரசு கடன் வாங்குகிறது. மத்திய அரசு எப்போது பணத் தட்டுப்பாடு என்றாலும் ரிஸர்வ் வங்கியில் கடன் பெறும். ரிஸர்வ் வங்கியில் அரசின் கையிருப்பு குறைந்து, மேலே மேலே கடன் வாங்கும் போது ரிஸர்வ் வங்கி அதற்கேற்ப நோட்டுக்களை அச்சடிக்கிறது. இவ்வாறு நோட்டுப் புழக்கம் அதிகமாவதைத்தான் ''பண வீக்கம்'' என்கிறோம். இப்போதுதான் அரசுக்கு, ''இது தவறு; மேலே மேலே பற்றாக்குறை பட்ஜெட் போட்டு, அதை ஈடுகட்ட ரிஸர்வ் வங்கியிலிருந்து கடன் வாங்கிக் கொண்டே போகக் கூடாது; அரசு வாங்கும் கடனுக்கும் ஓர் உச்ச வரம்பு வேண்டும்'' என்ற ஞானோதயம் பிறந்திருக்கிறது. இந்த விழிப்புணர்ச்சி நீடித்தால் நீண்ட கால நோக்கில், பணவீக்கம் குறைந்து விலைவாசிகளும் மேலும் உயராமல் ஸ்திரப்படலாம். ஆனால் அரசு இதைச் செய்ய அபிவிருத்தித் திட்டங்கள் பலவற்றை நிறுத்தி வைக்க நேரும். இது தொழில்வளப் பெருக்கத்தைப் பாதிக்குமா, எந்த அளவுக்கு என்றும் பார்க்க வேண்டும். இரண்டுக்கும் இடையில் ஒரு மையப் பாதையைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

**மா**நில அரசுகளுக்கு, மத்திய அரசு போன்று நோட்டுகள் அச்சடிக்கும் அதிகாரம் இல்லை. அதனால் அவை ரிஸர்வ் வங்கியிடம் மத்திய அரசு போல் அபரிமிதமாகக் கடன் பெறவும் முடியாது. ரிஸர்வ் வங்கி, கடுமையான நிபந்தனைகள் விதித்துத்தான் கடன் தரும். அதுவும் மத்திய அரசு அனுமதி பெற்ற பிறகே. சில சந்தர்ப்பங்களில் மாநில அரசு சக்திக்கு மீறிச் செலவு செய்வதாக ரிஸர்வ் வங்கி கருதினால், அந்த மாநில அரசுக்குக் கடன் வழங்க ரிஸர்வ் வங்கி மறுக்கவும் கூடும். இவ்வாறு கேரள அரசுக்கு கடன் வசதி சமீபத்தில் மறுக்கப்பட்டது. மேற்கு வங்க அரசோ, சரித்திரம் காணாத வகையில், 20 சதம் வட்டி தந்து தனியார் நிதி நிறுவனத்திலிருந்து ரூ. 60 கோடி சமீபத்தில் கடன் பெற்று, தனது உடனடித் தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டது. இவையெல்லாம் மாநில அரசுகள் நிதி நிர்வாகத்தில் போதிய கவனம் செலுத்தவில்லை என்பதையே உணர்த்தும். சமீபத்திய ரிஸர்வ் வங்கி அறிக்கை ஒன்று, மாநில அரசுகள் மக்களைக் கவர்வதற்காக ஊதாரித் திட்டங்களில் பணத்தை வீணடிப்பதாகச் சுட்டிக் காட்டுகிறது.

நமது தேசம் பொருளாதார ரீதியிலும் தொழில் ரீதியிலும் பலப்பட வேண்டுமானால், அரசு செலவழிக்கும் ஒவ்வொரு பைசாவும் மிகவும் அவசியமான செலவினமாக, உற்பத்தியைப் பெருக்க உதவுவதாக இருந் தால்தான் முடியும். பத்தாவது நிதி கமிஷனும் சமீபத்தில் இவ் விஷயத்தில் எச்சரிக்கை செய்திருக்கிறது. ஆனால் எல்லா எச்சரிக்கைகளும் செவிடன் காதில் ஊதிய சங்காக முடிவதுதான் வேதனை. மாநில அரசுகள் பலவும் வோட்டு அறுவடை கருதி இலவசத் திட்டங்களையே அறிவிக்கின்றன. இலவசத் திட்டங்களால் ஏழைகளின் நிலையை உயர்த்தவே முடியாது என்பதை மக்கள் புரிந்து கொண்டால்தான், இப்படி ஏமாற்றுவதைத் தலைவர்களும் கைவிடுவார்கள்.

**நி**தி கமிஷனின் முக்கியமான பொறுப்பு, மத்திய அரசு வசூலிக்கும் தனி நபர் வருமான வரியில் ஒரு கணிசமான பகுதியை மாநில அரசுகளுக்கு அவற்றின் தேவை அறிந்து பிரித்துக் கொடுப்பதாகும். மாநிலத்தின் ஜனத் தொகை, அதற்கு இதர இனங்களில் கிடைக்கும் வருவாய், அங்கு சராசரி தனிநபர் வருமானம் முதலிய பல அம்சங்களைக் கணக்கில் எடுத்துக் கொண்டு, பிறகுதான் நிதிக் கமிஷன் அம் மாநிலத்துக்கு நிதி ஒதுக்கீடு செய்கிறது.

தற்போது கே.ஸி. பந்த் தலைமையில் இயங்கும் நிதி கமிஷனிடம் எல்லா மாநிலங்களுமே தங்களுக்கு முன்னிலும் அதிக நிதி ஒதுக்கீடு செய்யுமாறு கோரியுள்ளன. ஆனால் நிதி கமிஷனால் இவர்களின் கோரிக்கையைப் பாதி அளவாவது நிறைவேற்றித் தர முடியுமா என்பது சந்தேகமே. எனவே, மாநில அரசுகள் தங்கள் செலவினங்களைக் கண்காணித்து, ஊதாரித்தனமாக நடந்து கொள்ளாதிருப்பது முன்னெப்போதையும் விட அவசியமாகிறது.

மாநில அரசுகளுக்கு வழி காட்டுவது போல் இவ் விஷயத்தில் மத்திய அரசும் நடந்து கொண்டால்தான் தேசம் உருப்படும்.

ஒரு தனிமனிதனின் ஊதாரித்தனம், அதிகபட்சம் அவன் குடும்பத்தை மட்டுமே பாதிக்கும். ஆட்சிப் பொறுப்பில் உள்ளோரின் ஊதாரித்தனம், நாட்டில் உள்ள ஒவ்வொருவரையும் பாதிக்கும்.

– வி. கோபாலன்

# பங்காரப்பாவை நீக்கப் பிரதமர் தயங்குவது ஏன்?



✱ இவரை நீக்க...



✱ ...தயங்குவது ஏன்?

● தி. இராஜ்குமார், கோமல். ❒

? பங்காரப்பாவை நீக்கப் பிரதமர் தயக்கம் காட்டுவது ஏன்?

! ''கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ்'' என்று சிலர் காரணம் கூறினாலும், பங்காரப்பாவை எதிர்ப்பவரிடையே அடுத்த தலைவர் குறித்து ஒற்றுமை இல்லாத அரசியல் காம்ப்ளெக்ஸ் தான் காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது.

● ஜி. நீலகண்டன், பெங்களூர்.

? குடும்பம், சொத்து, பதவி, அதிகாரம் போன்ற எதுவும் இல்லாத ஒரு சன்னியாசியைத் தலைவராகப் போட்டால் நாடு முன்னேறுமா?

! அப்படிப்பட்ட ஒருவரைத் தலைவராக நீங்க போடலாம்; மக்கள் வோட்டுப் போட வேண்டுமே!

● சி. ரவிச்சந்திரன், மேட்டூர் அணை.

? போபாலில் குடியரசுத் தலைவரால் தேசியக் கொடி தலைகீழாக ஏற்றப்பட்டதும் அதை யாரும் கவனியாமல் சிறிது நேரம் பறந்ததும் குறித்து...?

! சற்று நேரம் சென்றாவது கொடியை நிமிர்த்தி விடலாம்; இங்கே தலைகீழாகி விட்ட தர்மத்தை நிமிர்த்துவது யார்?

● பத்மசிவாஜி, நீடாமங்கலம்.

? அரசியலில் இன்றைய 'ஸ்டேட்ஸ்மன்' என்று யாரைச் சொல்லலாம்?



✱ பல ஆயிரம் கோடி!



✱ அதிகம் சாதிக்க...

! அப்படி யாரும் இல்லை என்பதுதானே நமது துரதிர்ஷ்டம்!

● கே. ஏ. காளிமுத்து, காரை.

? மத்திய மாநில அரசுகளைக் கண்டித்து தி.மு.க. கூட்டணி கட்சிகள் நவம்பர் 25ல் பந்த் நடத்த முடிவு செய்திருப்பது பற்றி?

! ஏற்கெனவே சீரழிந்துள்ள நமது பொருளாதாரம் மேலும் சீரழிய உதவும். மத்திய மாநில அரசுகளின் போக்கில் மாற்றம் இராது.

● து. சிவா, முசிறி.

? இந்தத் தீபாவளிக்காவது கூடுதல் பாமாயில், சர்க்கரை கிடைக்குமா?

! இங்கு கிடைத்தது. கிடைத்த பாமாயிலின் விலை ரூ 26க்கும் அதிகம் என்ற போது சர்க்கரையும் கசந்தது.

● ஆர். கருணாகரன், மேட்டூர் அணை.

? 'குழந்தைகளிடமிருந்து ஐந்து பைசா, பத்து பைசா கிடைத்தாலும் பெற்றுக் கொள்வேன்' என்று கலைஞர் கூறியுள்ளாரே?

! அட ராமா! குழந்தைகளைக் கூட இந்த அரசியல்வாதிகள் நிம்மதியாக இருக்க விட மாட்டார்கள் போலிருக்கே!

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை.

? பயணியர் விடுதி எனப்படும் டூரிஸ்ட் பங்களாவில் நம்மைப் போன்ற சாதாரணப் பயணிகளுக்கு இடம் தருவார்களா?

! அறை காலியாக இருந்தால் கட்டாயம் தர வேண்டும்; நீங்கள் உரிமையோடு கேட்டுப் பார்க்கலாம்.

● எஸ். இலங்கேஸ்வரன், வேலூர்.

? 'மூப்பனார் மனம் வைத்தால் முதல்வரை மாற்றுவார்' என்கிறாரே, குமரிஅனந்தன்?

! அதாவது காங்கிரஸ் முதல்வர்களை.

● ஆர். கிருஷ்ணமூர்த்தி, பனப்பாக்கம்.

? 'ஸார்க்' நாடுகளின் நிகழ்ச்சிகளைக் கண்டீரா?

! அளவுக்கு மிஞ்சி டெலிவிஷனில் காட்டப் போக அலுத்து விட்டது.

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

? தீபாவளி பண்டிகை அனுபவம் எப்படி?

! டீவி பாஷையில் சொல்வதெனில் ''வழக்க மான உற்சாகத்துடன் கொண்டாடப்பட் டது!''

● பி. சிவா, பாளையங்கோட்டை.

? பி. எச். பாண்டியன் - சத்தத்தையே காணோமே?

! நல்லாட்சி அணியின் சட்ட மூளையாக இயங்கி வருகிறாரே, தெரியாதா!

● கே. எம். ஜான் முகம்மது, இளையான் குடி.

? ''எதற்கெடுத்தாலும் எம்.ஜி.ஆர். பெயரைச் சொல்லிக் கொண்டிருக்க முடியுமா?'' என்று அமைச்சர் அரங்கநாயகம் கேட்கிறாரே?

! ஊஹும், எதற்கெடுத்தாலும் புரட்சித் தலைவி பெயரைத்தான் அவர் சொல்லிக் கொண் டிருக்க வேண்டும்.

● கற்குவேல், திருவனந்தபுரம்.

? ''ஜனதா தளத்தை விட்டு விலகுவது காலத் தின் கட்டாயம்'' என்கிறாரே குமாரதாஸ்?



* முதல்வரை மாற்றுவார்!



* 5 பைசா, 10 பைசா



* வழக்கமான அலறல்!



* சத்தத்தையே காணோமே!

! எந்த வேளையில் ஆர். எம். வீ. ''காலத்தின் கட்டாயம்'' என்ற சொற்றொடரைப் பயன் படுத்தினாரோ, அது ஒருவர் பாக்கியின்றி எல் லாருக்கும் கைகொடுத்து உதவி வருகிறது.

● எஸ். குருசேகர், வயலோகம்.

? 'எனக்குக் கட்அவுட் வைக்கக் கூடாது' என்று ஜெயலலிதா உத்தரவு வழங்கிய பிறகும் அவர் கட் அவுட் பற்றிய சிரிப்புகள் பத்திரிகை களில் வெளிவருவது சரிதானா?

! 'எனக்குக் கட்அவுட் வைக்கக் கூடாது' என்று ஜெயலலிதா உத்தரவு வழங்கிய பிற கும் அவர் கட்அவுட்கள் நிறுவப்பட்டு வரு வது சரிதானா?

● எல். மாறன், மேல்பட்டி.

? சில பத்திரிகை ஆசிரியர்களுக்கு ஸி.ஐ.ஏ. தொடர்பு இருப்பதாக உள்துறை அமைச்சர் சவாண் அலறுகிறாரே?

! இது நமது நாட்டில் அவ்வப்போது ஒலிக் கும் வழக்கமான அலறல். பத்திரிகைகள் எழுதுவது பிடிக்கவில்லை என்றால் அர சியல்வாதிகள் இப்படித்தான் புலம்புவார் கள்.

● டி. எஸ். திரவியம், தேனி.

? லட்ச ரூபாய் வைத்திருந்தால் லட்சாதிபதி; கோடி ரூபாய் வைத்திருந்தால் கோடீஸ்வரர்; பல ஆயிரம் கோடி வைத்திருந்தால்...?

! ஹர்ஷத் மேத்தா!

● என். சம்பத், தூத்துக்குடி.

? கிருஷ்ணா நதி நீரை எந்த வருஷ தீபா வளியன்று எதிர்பார்க்கலாம்?

! 'ஸாஷே'யில் தருவதெனில் ஏதாவது புனிதப் பத்திரிகையோ குமுதப் பத்திரி கையோ பொங்கலுக்கே கொடுக்கலாம்!

● எஸ். நாரம்புநாதன், அரக்கோணம்.

? தமிழகத் தொழில் துறையில் பச்சை விளக்கு எரிகிறதா? மஞ்சள் விளக்கு எரிகிறதா?

! சிவப்பு.

● எம். கே. பாஷா, உத்தமபாளையம்.

? 'என் மீது கூறப்படும் குற்றச்சாட்டுக்கள் யாவும் பொய்' என்று முதல்வர் கூறுகிறாரே?

! பின்னே நிஜம் என்றா சொல்வார்? என்ன ஸார், நீங்க...!

● ரா. நாச்சிமுத்து, போடிநாயகனூர்.

? 'அதிகம் சாதிப்பதற்காக அரசியலில் இறங்கு வோம்' என்று மக்கள் சக்தி இயக்கத் தலைவர் எம். எஸ். உதயமூர்த்தி கூறுகிறாரே?

! இவரே அரசியல்வாதியாக இருந்திருந்தால் மனதுக்குள் சம்பாதிப்பதற்காக என்று கூறிக் கொண்டு வெளிப்படையாக சாதிப்பதற்காக என்று கூறியிருப்பார்.

❒ ரூ 25 பரிசு பெறுபவர் :
தி. இராஜ்குமார்,
மேலத் தெரு, கோமல் (அஞ்சல்),
மயிலாடுதுறை (வட்டம்)
609 805.

## நீங்கள் கேட்டவை - தராசு

ஸ்ரீ:

# அருள்மிகு அரங்கநாதர் திருக்கோயில்
# ஸ்ரீரங்கம், திருச்சிராப்பள்ளி 620 006
## நித்திய ஆராதனைக் கட்டளை

அருள்மிகு அரங்கநாதர் திருக்கோயிலில் ஸ்ரீ நம்பெருமான், ஸ்ரீ ரங்கநாச்சியார் மற்றும் ஸ்ரீ சக்கரத்தாழ்வார் (சுதர்சனர்) சந்நதிகளில் ஒவ்வொரு நாளும் ஆறு காலம் நடைபெறும் பூசைகளில் சேவார்த்திகள் நேரடியாகப் பங்கு பெறும் பொருட்டு புதிதாக "நித்திய ஆராதனைக் கட்டளை" திட்டம் துவக்கப்பட்டுள்ளது. இத்திட்டத்தில் பங்குபெற விரும்பும் சேவார்த்திகள் இக்கோயிலுக்கு நன்கொடை அளித்து, அதிலிருந்து கிடைக்கும் வட்டித் தொகையை ஒவ்வொரு நாளும் நடைபெறும் பூசைகளுக்காகும் செலவுகளில் ஒரு பகுதிக்கோ அல்லது முழுவதுக்குமோ பயன்படுத்த உதவலாம்.

### ஸ்ரீ நம்பெருமாள் சந்நதி

சேவார்த்திகள் நன்கொடையாக ரூ.20,000 வழங்கினால், அதிலிருந்து ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டித் தொகையை ஸ்ரீ நம்பெருமான் சந்நதியில் ஒவ்வொரு ஆண்டும் ஒரு நாள் முழுவதுக்கும் பூசைக்காகும் செலவுக்குப் பயன்பட உதவி செய்யலாம்.

தனித்தனியே ஏதாவதொரு பூசைக்கென்றும் நன்கொடைகள் ரூ.1,000; ரூ.6,000; ரூ. 4,000; ரூ. 5000; ரூ. 2,000 மற்றும் ரூ.2,000 என்று அளிக்கலாம். இந்தத் தொகை ஸ்ரீ நம்பெருமான் சந்நதியில் ஒவ்வொரு ஆண்டும், குறிப்பிட்ட நாளில் நடைபெறும், முறையே திருவாராதனம், பொங்கல், உச்சி காலம், க்ஷீரான்னம், சேலசம்பா மற்றும் அரவணை பூசைகளுக்கு செலவிடப்படும்.

### ஸ்ரீ ரங்கநாச்சியார் சந்நதி

நன்கொடையாக ரூ.7,500.00 அளித்து, அதிலிருந்து ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டித் தொகையை, ஸ்ரீ ரங்கநாச்சியார் சந்நதியில் ஒவ்வொரு ஆண்டும் ஒருநாள் முழுவதும் நடைபெறும் பூசைக்காக செலவு செய்ய உதவி புரியலாம்.

தனித்தனியே ஏதாவதொரு பூசைக்கென்று நன்கொடைகள் ரூ.500; ரூ.1,500; ரூ.1,000; ரூ.2,500; ரூ.500 மற்றும் ரூ.1,500 என்றும் அளிக்கலாம். இந்தத் தொகை ஸ்ரீ ரங்கநாச்சியார் சந்நதியில் ஒவ்வொரு ஆண்டும், குறிப்பிட்ட நாளில் நடைபெறும், முறையே திருவாராதனம், பொங்கல், உச்சிகாலம், க்ஷீரான்னம், சேலசம்பா மற்றும் அரவணை பூசைகளுக்கு செலவிட துணைபுரியும்.

### ஸ்ரீ சக்கரத்தாழ்வார் (சுதர்சனர்) சந்நதி

சேவார்த்திகள் நன்கொடையாக ரூ.3,000 வழங்கி, அதிலிருந்து ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டித் தொகையை ஸ்ரீ சக்கரத்தாழ்வார் சந்நதியில் ஒவ்வொரு ஆண்டும் ஒருநாள் முழுவதும் நடைபெறும் பூசைக்காக செலவிட உதவி செய்யலாம்.

தனித்தனியே ஏதாவதொரு பூசைக்கென்றும் நன்கொடையாக ரூ.100; ரூ.1,300; ரூ.500; ரூ.600; ரூ.500 என்று அளிக்கலாம். இந்தத் தொகை ஸ்ரீ சக்கரத்தாழ்வார் சந்நதியில் ஒவ்வொரு ஆண்டும் குறிப்பிட்ட நாளில் நடைபெறும், முறையே திருவாராதனம், பொங்கல், உச்சிகாலம், சாயரட்சை மற்றும் சேலசம்பா பூசைகளுக்கு செலவு செய்ய பயன்படுத்தப்படும்.

### சேவார்த்திகளுக்கு மரியாதை மற்றும் பிரசாதங்கள்

ஒவ்வொரு ஆண்டும், குறிப்பிட்ட நாளில், ஒரு சந்நதியில் நடைபெறும் எல்லா பூசைகளுக்குமான செலவுகளுக்காக நன்கொடை அளிக்கும் சேவார்த்திக்கு பிரசாதத்துடன் சாத்துப்படி மாலை ஒன்றும், சாத்துப்படி வஸ்திரம் அல்லது வெள்ளி டாலர் ஒன்றும், ஒவ்வொரு ஆண்டும் அதே நாளில் மாலை 6-45 மணிக்கு க்ஷீரான்னம் பூசையின் போது வழங்கப்படும். ஒரு குறிப்பிட்ட பூசைக்கான நன்கொடையாக இருப்பின், சேவார்த்திக்குப் பிரசாதத்துடன் மரியாதை செய்யப்படும்.

நித்திய ஆராதனைக் கட்டளைக்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு வருமானவரிச்சட்டம் 80(G) பிரிவின்படி வரி விலக்கு அளிக்கப்படுகிறது.

நித்திய ஆராதனைக் கட்டளைக்கான நன்கொடைகள் தமிழ்நாடு, ஆந்திர பிரதேசம் மற்றும் பாண்டிச்சேரியிலுள்ள **இந்தியன் வங்கியின்** அனைத்து கிளைகளிலும் கட்டணம் ஏதுமின்றி ஏற்றுக்கொள்ளப்படும்.

மேற்கொண்டு விபரங்களுக்கும், விண்ணப்பப் படிவங்களுக்கும் துணை ஆணையர்/செயல் அலுவலர், அருள்மிகு அரங்கநாதர் திருக்கோயில், ஸ்ரீரங்கம், திருச்சிராப்பள்ளி 620 006; அல்லது தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம் மற்றும் பாண்டிச்சேரியிலுள்ள **இந்தியன் வங்கியின்** எந்தக் கிளையுடனும் தயவுசெய்து தொடர்பு கொள்ளவும்.



# படத்தை முடித்துக் கொடுத்த முதல்வர்!

இறுதியாக எம்.ஜி.ஆர். சொன்னார் : ''நாளைக்குப் பழைய டியூனைக் கொண்டாங்க; இன்னொரு தடவை போட்டுக் கேட்போம்.''

மறுநாள் சடையப்பச் செட்டியார் முந்தைய பாடல் கேஸட்டைத் திரும்பவும் எடுத்துக் கொண்டு போனார். பாட்டைக் கேட்ட எம்.ஜி.ஆர்., ''டியூன் பிரமாதமா இருக்கே! இதையா நான் வேண்டாம் என்றேன்! அன்றைக்கு டேப் ரிகார்டரில் ஏதாவது கோளாறாய் இருந்திருக்கும்!'' என்று ஒரு போடு போட்டார்! தோல்வியை ஒப்புக் கொள்வதிலும் அப்படி ஒரு சாணக்கியம்! மீனவ நண்பனில் எம்.ஜி.ஆரால் முதலில் நிராகரிக்கப்பட்டு பிறகு ஏற்கப்பட்ட எஸ்.பி.பியின் பாடல் இடம்பெற்ற கதை இது!

இன்னொரு பக்கம் ''அண்ணா என் தெய்வம்'' படப்பிடிப்பும் நடந்து கொண்டிருந்தது. அவுட்டோர் லொகேஷனுக்காக மெர்க்காரா போனோம். அங்கே நாலைந்து நாள் ஷூட்டிங் நடந்தது. இடையில் பெங்களூரில் லதாவுக்கு ஒரு நடனக் கச்சேரி. அதற்கு எம்.ஜி.ஆர். தலைமை வகித்ததால் இருவரும் புறப்பட்டுச் சென்றார்கள்.

அடுத்த நாள்...

''தமிழ்நாட்டில் தேர்தல்'' என்பதாக அறிவிப்பு வந்தது.

சட்டசபைத் தேர்தல் வேலைகளைக் கவனிக்க எம்.ஜி.ஆர். பெங்களூரிலிருந்து நேரே சென்னை சென்று விட்டார். எம்.ஜி.ஆர். இல்லாமல் ஷூட்டிங் தொடர வழியின்றி, எல்லோருமே 'பேக்-அப்' செய்து கொண்டு சென்னை திரும்பினோம்.

இன்னும் 'க்ளைமாக்ஸ்' காட்சி மட்டுமே எடுக்கப்பட வேண்டிய நிலையில் மீனவ நண்பன் படமும் சுமார் மூவாயிரம் அல்லது நாலாயிரம் அடியே எடுக்கப்பட்ட நிலையில் 'அண்ணா என் தெய்வம்' படமும் நின்று விட்டன.

எம்.ஜி.ஆர். தமிழகம் முழுதும் சுற்றுப்பயணம் செய்து தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டார். ஒரு பக்கம் இதெல்லாம் பரபரப்பாக இருந்தாலும், ''இவர் தேர்தலில் வென்று முதல்வர் ஆகிவிட்டால் படங்களின் கதி என்ன?'' என்றும் சிந்தித்துக் கொண்டிருந்தோம் - கவலையோடு.

தேர்தலில் மக்களின் அமோக ஆதரவைப் பெற்று அ.தி.மு.க. ஆட்சியைப் பிடித்தது. முதலமைச்சராக எம்.ஜி.ஆர். பதவிப் பொறுப்பு ஏற்க நாளும் குறிக்கப்பட்டது. அதற்குச் சுமார் பத்து நாட்களுக்கு முன் எம்.ஜி.ஆர். என்னை அழைத்தார். 'நின்று போயிருக்கும் படங்களுக்கு ஒரு வழி செய்யத்தான் கூப்பிடுகிறார்' என்று ஊகித்தவாறே சென்றேன்.

''மீனவ நண்பன் முடிக்க இன்னும் எத்தனை நாள் ஷூட்டிங் பாக்கி?'' என்று கேட்டார் எம்.ஜி.ஆர்.

''இரண்டே நாட்கள் ஒதுக்கிக் கொடுத்தால் போதும்'' என்றேன். உடனே தேதி குறித்துத் தந்தார்.

டைரக்டர் ஸ்ரீதர்

நான் திட்டமிட்டிருந்த கிளைமாக்ஸ் படி எம்.ஜி.ஆர்., நம்பியாரை புயல் வேகம், கொந்தளிக்கும் கடலில் படகில் பின் தூரத்திச் செல்ல வேண்டும். இதற்கு ஸ்டூடி யோவிற்குள் 'செட்' போட்டிருந்தோம். படப்பிடிப்பு நிகழ்ந்தன்று இதற்கு வேண்டிய இடி, மின்னல், புயல், மழை இவற்றை உருவாக்குகிற கருவிகளைத் தயாராக வைத் திருந்தேன். எம்.ஜி.ஆர். வந்ததும் ''என்ன காட்சி?'' என்று விளக்கம் கேட்டார். நான் சொல்லி விட்டு, ''ஆனா ஒரும் அண்ணே, மழை மட்டும் இப்ப வேண்டாம்னு நினைக் கிறேன்'' என்றேன்.

''ஏன்? ஏன்?''

''நீங்க இன்னும் ஒரு வாரத்தில் முத லமைச்சர் ஆகப் போறீங்க. இந்தச் சமயத் தில் ஏகமாகத் தண்ணீரில் நனைந்து ஜல தோஷம், ஜுரம் என்று ஏதாவது வந்து விட்டால்...? அதனால் ''சேஸ்'', ''ஃபைட்'' இரண்டையும் வைச்சுக்கலாம்; மழை வேண்டாம். ரொம்ப அவசியம்னா புயல், இடி, மின்னலுடன் நிறுத்திக்கலாம்.''

எம். ஜி. ஆர். சம்மதிக்கவில்லை. ''எனக்கு ஒண்ணும் ஆகாது. பயப்படா தீங்க. மழையும் இருக்கட்டும். அப்பத்தான் இயல்பாகவும் இருக்கும்; எஃபெக்டும் அதி கரிக்கும்'' என்று கூறி விட்டார். அதன் படியே கிளைமாக்ஸ் எடுக்கப்பட்டது.

படம் முடிந்து ரிலீஸ் ஆனது. ஓஹோ என்று ஓடியது. எம்.ஜி.ஆரின் தேர்தல் வெற்றி; முதல்வர் ஆனது எல்லாம் படத்தின் வெற்றிக்கும் துணைசெய்தன.

ஆரம்ப நிலையிலேயே நின்று போன ''அண்ணா நீ என் தெய்வம்'' படத்தையும் எம்.ஜி.ஆர். முடித்துக் கொடுக்கத் தயாராக இருந்தார். ஆனால் தயாரிப்பாளர்களால் அத்தனை அவசரமாகப் பணம் ஏற்பாடு செய்ய முடியவில்லை. எடுக்கப்பட்டவரை அந்தக் காட்சிகளைப் பயன்படுத்தித்தான் சமீபத்தில் பாக்யராஜ் ''அவசர போலீஸ்-100'' தயாரித்தார்.

'மீனவ நண்பன்' படப்பிடிப்பின் கடைசி நாளன்று, ஷூட்டிங் முடிந்து எம்.ஜி.ஆர். விடைபெற்ற போது, நான் மகிழ்ச்சி பொங்க, முதல்வருக்கு வாழ்த்துச் சொன்னேன். அவரது ஒத்துழைப்புக்கு நன்றி தெரிவித்தேன்.

அவர், ''நீங்க பதவி ஏற்பு விழாவுக்கு அவசியம் வரணும்'' என்றார்.

''கண்டிப்பாக வருவேன்; சரித்திரம் படைக்கும் நிகழ்ச்சி அல்லவா அது'' என்றேன். ''இப்போது போல் உங்களை அருகிலிருந்து பார்க்க முடியாவிட்டாலும் நிச்சயம் ஏதாவது ஒரு மூலையில் இருப் பேன்'' என்றேன்.

''வருவதாய்ச் சொல்லிட்டீங்க இல்ல; மற்றதை நான் பார்த்துக்கறேன்'' என்றார் எம்.ஜி.ஆர்.

பதவி ஏற்பு விழாவுக்கு நான் போன போது எனக்கு ஆச்சர்யம் காத்திருந்தது. என்னை வரவேற்று, வி.வி.ஐ.பிக்கள் வரி சையில் உட்கார வைக்க எல்லா ஏற்பாடு களையும் செய்திருந்தார்.

எம்.ஜி.ஆர். வந்தார். மேடை ஏறு முன்னர் அவர் பார்வை வந்திருந்த வி.ஐ. பி.க்களை ஒருமுறை நோட்டம் விட்டது. என் முகத்தின் மீது ஒரு கணம் நிலைத்து நின்றது. 'வந்து விட்டேன் பார்த்தீர்களா?' என்பது போல் நான் எம்.ஜி.ஆரை நோக்க, 'சொன்னபடியே உங்களை வரவேற்க ஏற்பாடுகளைச் செய்து விட்டேன் பார்த்தீர் களா?' என்பது போல் எம்.ஜி.ஆர். என்னைப் பார்த்து முறுவலித்தார். அந்தப் புன்னகையின் பின்னால், எத்தனையோ அலுவல்களுக்கிடையிலும் நண்பனுக்குக் கொடுத்த வாக்கை மறவாமல் நிறைவேற்றி வைத்த திருப்தி நிலவியது.

## முடிவுரை

எம். ஜி.ஆர்., சிவாஜி போன்ற வர்கள், திரைப்பட உலகில் சகாப்தங் களை உருவாக்கிய சரித்திர புருஷர்கள். அவர்களுடன் சேர்ந்து பணிபுரிய எனக்குக் கிடைத்த வாய்ப்புக்கள் பெரும் பாக்கியம்.

கடந்த ஓராண்டுக்கும் மேலாக இந்தத் தொடர் மூலமாக என் திரை உலக வாழ்க் கையைத் திரும்பிப் பார்த்து, என் அனுப வங்களை உங்களுடன் பகிர்ந்து கொள்ள முடிந்ததில் எனக்கு அளப்பரிய மகிழ்ச்சி உண்டாகிறது. இதற்கு நல்லதொரு வாய்ப்பை வழங்கிய கல்கி பத்திரிகைக் கும் அதன் ஆசிரியருக்கும், வாரா வாரம் எழுதுவதற்கு உதவிய நண்பர் சந்திர மௌலிக்கும் என் இதயபூர்வமான நன்றி.

இந்தத் தொடர் நூல் வடிவம் பெறு முன் இது பற்றிய உங்கள் எண்ணங்களை நான் அறிய விரும்புகிறேன். எனக்கு நேரிடையாகவோ அல்லது கல்கி காரி யாலயத்துக்கோ எழுதுங்கள்.

படம் - உதவி :

**பிலிம் நியூஸ் ஆனந்தன்**



''நாம ஒருவரை ஒருவர் சீக்கிரமே காதலிக்க ஆரம்பிக் கிறது நல்லதுன்னு தோணுது...''

''எதனால் அப்படிச் சொல்றீங்க...?''

''இல்லே... ஆபீஸ்ல எல்லாரும் நாம காதலிக்கிற விஷயம் தெரிஞ்சு போச்சுன்னு பேசிக்கிறாங்க...!''

- சக்தி அபிநயா

# பெட்ரோலுக்கு மாற்றாக பாட்ரெக்ஸ்!

பெட்ரோல் விலை ஏகமாய் ஏறிவிட்டதே என்று கவலைப்படுகிறீர்களா? பெட்ரோலை விட ஒரு லிட்டருக்கு மூன்று ரூபாய் குறைந்த விலையில் அதற்கு மாற்றாக பாட்ரெக்ஸ் (Patrex) என்னும் திரவம் மஹாராஷ்டிராவில் இப்போது கிடைக்கிறது. கெமிக்கல் இன்ஜினீயரான சந்தீஷ் வோராவால் கண்டுபிடிக்கப்பட்ட இதனைக் கார்களில் உபயோகிக்க, கார் என்ஜினில் எந்தவித மாற்றமும் செய்யத் தேவையில்லை. எல்லாவித பரிசோதனைகளுக்குப் பிறகு இந்திய அரசாங்கத்தின் பெட்ரோலிய இலாகா இதனை அங்கீகரித்துள்ளது. ஆனால் இது பெட்ரோல் பங்க்குகளில் கிடைக்காது. இதற்கென்றே பிரத்யேகமாக விநியோகஸ்தர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். அவர்களிடமிருந்து விசேஷ பாதுகாப்புக் கொண்ட பத்து லிட்டர் கேன்களில் இது கிடைக்கிறது. இதிலிருந்து வெளிப்படும் புகையின் விஷத்தன்மை, பெட்ரோலிலிருந்து வெளியேறும் புகையின் விஷத்தன்மையைவிடக் குறைந்தது என்று சோதனையில் நிரூபிக்கப்பட்டுள்ளது என்பது இதற்கு ஒரு ப்ளஸ் பாயிண்ட்!

## தியேட்டர்களின் திண்டாட்டம்

பல வருடங்களாக சாமானிய மக்களின் பொழுதுபோக்குச் சாதனமாக இருந்து வரும் சினிமா தியேட்டர்கள் பம்பாயில் ஒவ்வொன்றாக மூடப்பட்டு வருகின்றன. கடந்த நான்கைந்து வருடங்களில் 25 தியேட்டர்கள் மூடப்பட்டு விட்டன. சில தியேட்டர்கள் ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ்களாக மாற்றப்பட்டு விட்டன. வேறு வழியில்லாததால் சினிமாத் துறையைச் சேர்ந்த அனைவரும் காலவரையற்ற வேலை நிறுத்தம் செய்ய முடிவெடுத்தனர். இதையடுத்து அரசாங்கம் இரண்டு முக்கிய சலுகைகளைத் தியேட்டர்களுக்கு அளித்தது.

1. தியேட்டர்களின் பரப் பளவை 60% ஆகக் குறைத்து, மீதி 40% பகுதியை ஷாப்பிங் மற்றும் வேறு வர்த்தக ரீதியான காரியங்களுக்குப் பயன்படுத்தலாம்.

2. ஒவ்வொரு டிக்கெட்டிலும் ஒரு ரூபாய் ஏற்றி, அந்தப் பணத்தைத் தியேட்டர் பராமரிப்பிற்காக உபயோகப்படுத்தலாம்.

இந்தச் சலுகைகள் காரணமாக வேலை நிறுத்தம் தடுக்கப்பட்டதோடு, தியேட்டர்காரர்களுக்குச் சிறிது உற்சாகத்தையும் கொடுத்தது. ஆனாலும் அவர்கள், ''இந்தியப் படங்களின் நீளம் குறைய வேண்டும். அப்போதுதான் காட்சிகளின் எண்ணிக்கையை அதிகரித்து, வரவு செலவை ஈடுகட்ட முடியும்'' என்று கருதுகின்றனர். ஆனாலும் சண்டை, பாட்டு, டான்ஸ் என்ற மசாலாக்கள் நிறைந்த நம் படங்களின் நீளம் குறையுமா?

## வதந்தி படுத்தும் பாடு!

பம்பாயின் பிரபல ஜே.ஜே. மருத்துவமனையில் கடந்த இரண்டு வாரங்களாக 'ஜே ஜே' என மக்கள் கூட்டம் பொங்கி வழிகிறது. அதற்கு என்ன காரணம் என்று கேட்டால் ஆச்சர்யப்படுவீர்கள்!

பதினேழு வயதுப் பெண் ஒருத்தி நமாஸ் படித்துக் கொண்டிருக்கும் போது இறந்தாளாம்; அவள் புதைக்கப்பட்ட பின் தனது தாயின் கனவில் வந்து, தான் உயிரோடு இருப்பதாகக் கூறினாளாம்! புதைகுழியைத் தோண்டிய போது, பெண் உயிருடன் இருந்ததால் அவளை ஜே. ஜே. மருத்துவமனையில் அட்மிட் செய்தனராம். அங்கு திடீரென அவளது நகங்களும் தலைமுடியும் வளர ஆரம்பித்தனவாம்! - இது தான் ஓர் உருதுப் பத்திரிகையில் வந்ததாகக் கூறப்படும் செய்தி. இதையடுத்து ஜே. ஜே. மருத்துவமனை சரியாக இயங்க முடியவில்லை. போலீஸ் பாதுகாப்பு அதிகரிக்கப்பட்டது. கூட்டம் அதிகமானதால் ஒரு நாள் லத்தி சார்ஜ் கூட நடந்தது. முதல் நாளன்றே மருத்துவமனை அதிகாரிகள் மராத்தியிலும், உருதுவிலும் போர்டுகள் வைத்து செய்தி வெறும் வதந்திதான் என்று அறிவிப்புகள் வேறு செய்தனர். இதில் வேடிக்கை என்னவென்றால் செய்தி வந்தது எந்தப் பத்திரிகையில் என்று அங்கு கூடியிருந்த ஒருவரால் கூடச் சொல்ல முடியவில்லை என்பதுதான்!

* அறிவிப்புகள் எழுதி வைத்தும் பயனில்லை!



- அம்ருதா பார்த்தசாரதி

# இலவச இணைப்பு; பயனுள்ள கையேடு!

◆ ரஜினியின் மனம் கவரும் அட்டைப்படம் கண்டேன். தத்ரூபமான, தெளிவான அச்சு. போதாதற்கு தீபாவளி ரிலீஸ் படங்களின் கதைகளைச் சுருக்கமாகக் கூறி எங்களை மகிழ்ச்சியில் திளைக்க வைத்து விட்டீர்கள்!

ஈரோடு - 3, என். ரஜினிதேவராஜ்.

◆ இலவச இணைப்பு... பயனுள்ள ஒரு கையேடாக இருப்பதுடன் இளம் தாய்மார்களுக்கு, (குறிப்பாகப் பெரியவர்கள் துணையின்றி இருப்பவர்களுக்கு) ஒரு சிறந்த வரப்பிரசாதமாக அமைந்திருக்கிறது.

பெங்களூர் - 10, என்.கே. ஈசுவரி.

◆ அடையாறு ஆனந்த விநாயகரை, நேரில் சென்று தரிசித்து வந்த உணர்வு ஏற்பட்டது, 'ஆனந்த விநாயகரின் அழகுத் திருக்கோலம்' கட்டுரையைப் படித்து முடித்தபோது.

கும்பகோணம், புலவர் எஸ்.கே. மூர்த்தி.

◆ புஷ் - கிளின்டன் கார்ட்டூன் பார்த்ததும் சிரிப்பை வரவழைத்துவிட்டது.

நவமலை, பி. ஜெயப்பிரகாஷ்.

◆ வை. கோபாலசாமியைப் பற்றி விளக்கமாகக் கூட்டிக் காட்டியது சரி. தி.மு.க. விற்கு உறுதியான தலைமையாய்க் கலைஞர் இருக்கும் இப்போதைய நிலைமையில், வை. கோ. தலைமைப் பொறுப்புக்குத் தகுதியானவர்தானா என்ற கேள்வி தேவையே இல்லாதது.

கொளாவட்டம், கே. ஆர். தேவேந்திரன்.

◆ நன்கொடை கொடுப்பதில் கூட பயர் அந்தஸ்து, அரசியல் தகுதி பார்த்துத்தான் கொடுக்கிறார்கள்; சமூக நன்மை, வறியவர் நலன் போன்றவை ஏதும் பார்ப்பதில்லை என்பதைப் படம் பிடித்துக் காட்டியுள்ளது "தலைவர் வருகை" சிறுகதை.

திருச்சி - 21, கே.என். இராமகிருஷ்ணன்.

◆ "மனித அரக்கர்கள்!" என்னும் தங்களின் தலையங்கம் படித்தேன். 'மகன் இறந்தாலும் பரவாயில்லை; மருமகள் விதவையானால் சரி' என்கிற மாரியார்த்தனம் நமது எதிர்க்கட்சி, ஆளுங்கட்சி அரசியல் வாதிகளிடமிருந்து என்று மறைகிறதோ அன்றுதான் நமது நாட்டுக்கு விமோசனம்.

அரசரடி, நெல்லை வி. சிவா.

◆ சாண் ஏறினால் முழம் சறுக்குகின்ற இன்றைய பொருளா... ரத்தில், வீட்டில் சிக்கனம் வேண்டும் என்ற எண்ணம் இருப்பினும், அதைச் செயலாக்கத் திறமையும் திடமனதும் வேண்டும் என்ற கருத்து "வீட்டில் சிக்கனம் - தேவை இலக்கணம்" என்று சிறுகதையில் வருவது மிகவும் உண்மை. நாளொரு மேனியாய்த் திடுக்கிட வைக்கும் பொருள்களின் விலை யேற்றத்தைக் கண்டு சோர்வடையும் நேரத்தில் டானிக் போல வந்துள்ளது இக்கதை.

தக்கோலம், அ. முஸ்தபா.

◆ பெங்களூர் கடிதம் படித்தேன். அந்தக் காலத்தில் ஊர் நாட்டாண்மையை எதிர்த்துக் கொண்டால் ஆபத்து. இந்தக் காலத்தில் ஆளுங்கட்சி எம்.எல்.ஏ.வை எதிர்த்துக் கொண்டால் ஆபத்து. மக்களுக்குச் சேவை செய்வேன் என வாக்குறுதியளித்த எம்.எல்.ஏ., எம்.பிக்களிடம் சேவை செய்ய வேண்டியதைப் பற்றி நினைவுபடுத்தினாலே அவர்களுக்குப் பொல்லாக் கோபம் வருகிறது. சொல்ல முடியாத துயரத்திற்கு நாம் ஆளாகிறோம். சம்பாதிக்க வேண்டி எம்.எல்.ஏ., எம்.பி. ஆக வேண்டுமென நினைப்பவர்களிடம் மக்களுக்குச் சேவை செய்யச் சொன்னால் அவர்களுக்குக் கோபம் வருவதிலும், கொலை செய்ய எண்ணம் வருவதிலும் என்ன ஆச்சரியம்.

இலால்குடி, எம். இராஜேந்திரன்.

◆ மருத்துவர் என்பவர், மனோதத்துவவாதியாகவும், மனிதாபிமானம் மிக்கவராகவும் இருக்க வேண்டும் என்பது எவ்வளவு அவசியம் என்பதையே டாக்டர் ஞானப்பிரகாசத்தின் அனுபவங்கள் எடுத்துக் காட்டுகின்றன. இதை இன்றைய இளைய தலைமுறை மருத்துவர்கள் உணர வேண்டும்.

மதுரை, வி.பி. மகராசி.

◆ பத்மா ரவிசங்கரின் 'இனி ஒரு சதி' தொடர் வாரா வாரம் விறுவிறுப்புடன் ஜெட் வேகத்தில் சென்றது. பாராட்டு.

விசலூர் - 1, ஜி.ஜி. கிருஷ்ணன்.

◆ கல்கி கோவை நகரச் சிறப்பிதழ் செய்தி சேகரிப்புக்கு வந்த போது, இந் நகரில் பார்க்கிங் ஃபீஸ் அதிகமாக வசூலிக்கப்படுகிறது என்ற கருத்தைப் பொது மக்கள் சார்பாகத் தெரிவித்திருந்தீர்கள்.

மக்களின் நியாயமான கோரிக்கைக்கு இணங்கி, பார்க்கிங் கட்டணங்களைக் கீழ்க் கண்டவாறு திருத்தியமைத்துள்ளோம் :

- லாரிகள், டெம்போக்கள், கார்கள் மற்றும் மூன்று சக்கர வாகனங்கள் - ரூ. 75/- (மாதம் ஒன்றுக்கு)
- இரண்டு சக்கர வாகனங்கள் - ரூ. 15/- (மாதம் ஒன்றுக்கு)
- சைக்கிள்கள் - இலவசம்

முன்னாள் ராணுவத்தினரைப் பணியில் அமர்த்தி இத் தொகையை வசூலிக்க கோவை மாநகராட்சி ஏற்பாடுகள் செய்துள்ளது.

கோயம்புத்தூர், ஆணையர், கோவை மாநகராட்சி.



வெற்றி
நடைபோடுகிறது
சத்யம் 70mmA/c
சூரியன் A/c
கிரவுன்
3 காட்சிகள்
ரூபம் A/c
4 காட்சிகள்
வசந்தி A/c
பகல் காட்சி
மற்றும் தமிழகமெங்கும்
ராஜ் பிலிம்ஸ் இண்டர்நேஷனல்
உங்கள் சத்யராஜ் நடித்து வழங்கும்
ராமநாதனின்
திருமதி பழனிச்சாமி
(சினிமாஸ்கோப்)
R.சுந்தர்ராஜன்
இசைஞானி
இளையராஜா
ராஜராஜன்
ராமநாதன்
Elegant

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

கல்கி 1942, நவம்பர் 1, 10 இதழ்கள்

## தலையை எடு!




"யுத்த அபாயம் நெருங்கியிருக்கும் போது அடக்கு முறையில் தலையை விட்டுக் கொண்டிருப்பது பிசகு" என்று ராஜாஜி வற்புறுத்துகிறார். ஆனால், பானைக்குள் விட்ட தலையை வெளியே எடுப்பது இலேசான காரியமா?

## சபாஷ் நாணு!

ரஸிக ரஞ்சனி சபையில் தஞ்சாவூர் நாணுவின் கச்சேரி நடந்தது. தஞ்சாவூர் ஜில்லா பாஷையில், 'வெளுத்துப் பூண் கட்டி விட்டார்!' என்றுதான் சொல்ல வேண்டும். மாயவரம் கோவிந்தராஜப் பிள்ளையின் பிடிலும் சேர்ந்தபடியால், கச்சேரி வெகு உற்சாகமாகவும் உயர்தரமாகவும் அமைந்தது.

நெய்க்கும் சர்க்கரைக்கும் எவ்வளவு பொருத்தமோ, மிளகாய்ப் பொடிக்கும் நல்லெண்ணெய்க்கும் எப்படி வாய்ப்போ, அவ்விதம் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணனின் கம்பீரமான இனிய குரலுக்கும், ஸ்ரீ கோவிந்தராஜனின் மதுரமான பிடில் வாசிப்புக்கும் நன்றாகப் பொருந்தியிருக்கிறது. சங்கீத ஆர்வத்திலும், வித்வத்திலும் ஒருவருக்கொருவர் இணையாயிருக்கிறார்கள். நீ முந்தி, நான் முந்தி என்று போட்டி போட்டுக் கொண்டு பாடுவதிலும் வாசிப்பதிலும் அவர்கள் உற்சாகம் காட்டும் போது சபையோருக்கும் உற்சாகம் ஏற்படுகிறது. பல்லவி முடிந்த பிறகு ராகமாலிகை ஸ்வரம் பாடுவதில் இந்த உற்சாகம் உச்ச நிலைமையை அடைந்தது. அடாணா, பியாக், கானடா ராகங்களின் ஸ்வரத்தில் ஒருவரோடொருவர் போட்டி போட்டுச் சபையோரிடம் மாற்றி மாற்றி 'அப்ளாஸ்' வாங்கினார்கள்.

*ஆடல் பாடல் - "கர்நாடகம்"*

## என்ன செய்தீர்?

*காரியதரிசி* : ஓய், என்னங்காணும்! இங்கே இவ்வளவு பேரைக் காக்க வைத்து



விட்டுச் சுருதி சேர்க்கிறீரே! உமக்கு அட்வான்ஸ் கொடுத்து மூன்று மாசம் ஆகிறது; இவ்வளவு நாளாகச் சுருதி சேர்க்காமல் என்ன செய்தீர்?

## பூட்டு எங்கே?



இந்திய நெருக்கடியைத் தீர்ப்பதற்குச் சரியான சாவியுடன் ராஜாஜி மீண்டும் வடநாட்டுக்குப் போயிருக்கிறார். ஆனால் பூட்டை மறைத்துக் கொண்டிருப்பவர்கள் அவருக்குக் கொஞ்சம் வழிவிட்டாலல்லவா காரியம் ஜயம் ஆகும்!

## சாவி எங்கே?



**தங்கம் :** மங்களம், நம்ம சாமுவுடைய புதுப் பள்ளிக்கூடத்தைக் கலெக்டர் வந்து திறந்து வைச்சாராம்.

**மங்களம் :** ஏன்! சாவி எங்கே போச்சு? தொலைஞ்சு போச்சா என்ன? பசங்களாலே கதவைத் திறக்க முடியவில்லையா?

– **எஸ். வி. எல். நாராயணன்.**

## யுத்த ரேடியோ

ஹலோ! இது எல் அலமின்! ஸ்டாலின்கிராட் நகரில் நெருக்கடியான நிலைமை ஏற்பட்டிருக்கிறதென்பதைத் தெரிந்து கொண்டதும் 'டக்'கென்று கிளம்பி இங்கே வந்தேன். மணல் முட்டில் ஏறிக் கொண்டு பார்க்கும் பொழுது என் மேல் சில துப்பாக்கிகளும், மிஷின் துப்பாக்கிகளும் வந்து விழுந்தன. சுற்றுமுற்றும் பார்த்த பொழுது ஜெர்மானியர் கையி



லுள்ள ஆயுதங்களை எறிந்து விட்டுத் தலைவிரி கோலமாக ஓடிக் கொண்டிருக்கிறார்கள். ஓடிக் கொண்டிருந்த அச்சத் துருப்புகளைத் துரத்திக் கொண்டு பிரிட்டிஷ் இயந்திரப் படை சென்று கொண்டிருக்கிறது. ''சரி! எட்டாவது சேனை எதிரியை அல்லோலகல்லோலப்படுத்தி விட்டிருக்கிறது. சபாஷ்! மாண்ட்கோமரி'' என்று பிரிட்டிஷ் சேனைத் தலைவரை மனதிற்குள் பாராட்டினேன்.

ஒரு கூடாரத்தின் வாசலில் பிரிட்டிஷ் தளபதி மாண்ட் கோமரி நின்று கொண்டிருந்தார். ''பத்திரிகை நிருபர்களே! வாருங்கள்!'' என்று கனிந்த குரலில் வலது கைக் கட்டை விரலை உயர்த்தி அவர்களைக் கூப்பிட்டார். கட்டை விரலை உயர்த்தினால், 'வெரு குஷி' 'நல்ல சமாசாரம்' என்று அர்த்தம். வந்தவர்கள் பத்திரிகை நிருபர்கள் என்று தெரிந்தது. ''கேளுங்கள்! நமக்குப் பரிபூரண வெற்றி கிடைத்து விட்டது. பன்னிரண்டு நாள் சண்டை போட்டு எதிரியைப் புறமுதுகு காட்டி ஓட அடித்து விட்டோம். கூடிய சீக்கிரத்தில் எதிரியை ஹதம் செய்து தீர்த்து விடுவோம்'' என்று கூறினார் மாண்ட்கோமரி.

## அன்புள்ள அருண் கண்மணி,



நீ தினமும் யோகாசனம் செய்கிறாய்னு மாமாவிடம் சொன்னபோது, அவரும் என்னை மாதிரியே சந்தோஷப்பட்டார். பப்லுவையும் யோகாசனம் செய்யச் சொல்லு. ஆனால் ஒண்ணு.. யோகாசனம் தப்புத் தப்பா பண்ணவே கூடாது. ஜாக்கிரதையாக இருக்கணும். அதனாலே, அப்பா பக்கத்துலேயே இருக்கட்டும். அவருக்குத்தானே எப்படிப் பண்ணணும்னு தெரியும்.

பப்லு இடி மழைக்குப் பயந்து அழுவதாக எழுதியிருக்கே. அப்போ நீ அவளைக் கேலி செய்வாயோ? அப்படிச் செய்தால் அவள் பயம் போகவே போகாது. 'இடி, மழையைக் கண்டு பயப்பட வேண்டாம்'னு நீதான் அவளுக்குச் சொல்லிக் கொடுக்கணும்.

இடி மழையோட பெரிய புயல் வீசப்போகுதுன்னு முன்னாடியே கண்டுபிடிக்க சொல்லுறதுக்கே ஒரு தனி ஆபீஸ் இருக்குன்னு உனக்குத் தெரிஞ்சுருக்கும். புயல் அடிக்கப் போவதை அவங்க எப்படி கண்டு பிடிக்கறாங்க தெரியுமா....? ஸாடிலைட் என்கிற செயற்கைச் சந்திரனை ஒரு ராக்கெட் மூலமா பூமிக்கு மேலே ரொம்ப உயரத்துல அனுப்பறாங்க. இதுக்கு ஏன் செயற்கைச் சந்திரன்னு பேரு? பூமி, சூரியனைச் சுற்றிச் சுற்றி வர்ற மாதிரி, சந்திரன் பூமியைச்சுற்றி வர்றது உனக்குத் தெரியும். இந்த ஸாடிலைட்டும் சந்திரன் மாதிரியே பூமியைச் சுற்றிச் சுற்றி வருது. அதனால்தான் செயற்கைச் சந்திரன்னு குறிப்பிடறோம். இந்த ஸாட்டிலைட் மேக மண்டலங்களுக்கு மேலேயே போயிடறது. ரொம்ப உயரத்துலே இருந்தபடியே பூமிக்கு மேலே இருக்கிற மேகங்களையும் கடல்ல உருவாகிற சுழிக் காற்றையும் அது போட்டோ எடுக்கும். அந்த போட்டோக்களைப் பூமிக்கு அனுப்பும். பூமியில இருக்கிற வானிலை ஆராய்ச்சி நிலையத்துல, அந்தப் படங்களையெல்லாம் ஆராய்ச்சி பண்ணி, எங்கே, எப்போ மழை பெய்யும்னு சொல்லுவாங்க. அது மட்டுமில்லை....., எந்தெந்த ஊரில் புயல், இடி மழை அடிக்குமோ அந்த ஊருக்கெல்லாம் 'இன்ஸாட்' என்கிற செய்தித் தொடர்பு ஸாடிலைட் மூலமாகச் செய்தியை அனுப்பிடுவாங்க. இதற்கு Disaster Warning System அப்படின்னு பெயர். இன்ஸாட், புயல் செய்தியைக் குடுக்கறதோட, அந்தந்த ஊரில் அபாயச் சங்குகூட ஊதச் செய்யும்! உடனே அந்த ஊரில் ரேடியோ, டீ.வி., மூலமா எல்லாருக்கும் எச்சரிக்கை செய்வாங்க; ஸ்கூலெல்லாம் லீவு விட்டுடுவாங்க....

அடுத்த முறை புயல் - மழைக்காக உனக்கு லீவு கிடைச்சா நீ ஸாடிலைட்டுகளுக்குத்தானே தாங்க்ஸ் சொல்லணும்!

அன்பு முத்தங்களுடன்,

அன்பு அத்தை

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

# சில குழந்தைகள் ஆரோக்கியமாக உள்ளனர். வேறு சிலர் நோய் வாய்ப்படுகின்றனர். எதனால்?

வைட்டமின்களும் மினரல்களும் சரியான சம அளவில் கலந்து ஊட்டச்சத்தைக் சேர்க்க உதவுகின்றன; ஊட்டச்சத்தினால் குழந்தையின் உடம்பில் நோய் எதிர்ப்பு ஆற்றல் வளர்கிறது. இது நிரூபிக்கப்பட்ட உண்மை.

ஊட்டச்சத்துக்கள் சம அளவில் கலந்த உணவின் மூலம்தான் இந்த வைட்டமின்களையும் மினரல்களையும் பெற முடியும்.

உங்கள் டாக்டரிடம் கேளுங்கள் சொல்லுவார். உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனபிறகு பால் மட்டுமே போதாது. ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வாரமும் உங்கள் குழந்தைக்கு ஊட்டச் சத்துக்கள் சம அளவில் கலந்த திட உணவைக் கொடுக்க வேண்டும்.

பெரும்பாலான தாய்மார்களுக்கு இது முடிவதில்லை. வழக்கமான உணவு வகைகள் சரிப்பட்டு வருவதில்லை. பிறகு என்னதான் வழி?

செரிலாக். ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த, உங்கள் குழந்தைக்கு மிகவும் பழக்கமான பாலின் எல்லா நற்பயன்களும் அடங்கிய திட உணவு. வளரும் குழந்தைகளுக்குத் தேவைப்படும் மிகச் சிறந்த பால்புரோட்டீன்கள் இதில் உள்ளன. மேலும், கொழுப்புச் சத்துக்கள், கார்போஹைட்ரேட்ஸ், இரும்புச்சத்து, கால்ஷியம் ஆகிய சத்துக்கள் சரியான அளவில் கலந்த உணவு செரிலாக். வைட்டமின்கள் A, D, E, B, காம்ப்ளெக்ஸ், மற்றும் C இதற்குப் பலம் சேர்க்கின்றன.

இன்னுமொரு சிறப்பு. செரிலாக் இப்போது நெஸ்லேயின் புரட்சிகரமான புதிய Z- கூல் என்ஸைமேடிக் முறைப்படி தயாரிக்கப்படுகிறது. இதனால் தானியங்கள் எளிதில் ஜீரணமாவதற்காக முன்கூட்டியே பக்குவப்படுத்தப்படுகிறது. செரிலாக் மிக எளிதில் ஜீரணமாகிவிடுகிறது. மிருதுவாகவும், சுவையாகவும் இருக்கிறது.

எனவே, உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் செரிலாக் கொடுங்கள். ஏனென்றால், இதில் சரியான வைட்டமின்களும் மினரல்களும் உள்ளன. ஏனென்றால், பாலின் நற்பயன்கள் இதில் உள்ளன. உங்கள் குழந்தை ஆரோக்கியமாக இருப்பதற்குத் தேவையான ஊட்டச்சத்துக்கள் சம அளவில் கலந்த திட உணவு இதுவே.




முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மிகவும் சிறந்தது. குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் தாய்ப்பாலுடன் கூடவே, தானிய உணவு வகைகளைக் கொடுங்கள்.